𑌦𑍁𑌹𑌿𑌤𑌾 𑌜𑌨𑌕𑌸𑍍𑌯𑌾𑌹𑌂 𑌵𑍈𑌦𑍇𑌹𑌸𑍍𑌯 𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 ।
𑌸𑍀𑌤𑍇𑌤𑌿 𑌨𑌾𑌮 𑌨𑌾𑌮𑍍𑌨𑌾𑌹𑌂 𑌭𑌾𑌰𑍍𑌯𑌾 𑌰𑌾𑌮𑌸𑍍𑌯 𑌧𑍀𑌮𑌤𑌃 ॥

துஹிதா ஜநகஸ்யாஹம் வைதேஹஸ்ய மஹாத்மந: ।
ஸீதேதி நாம நாம்நாஹம் பார்யா ராமஸ்ய தீமத: ॥

कर्मणैव हि संसिद्धिं आस्थिता जनकादय: ।

𑌕𑌰𑍍𑌮𑌣𑍈𑌵 𑌹𑌿 𑌸𑌂𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌂 𑌆𑌸𑍍𑌥𑌿𑌤𑌾 𑌜𑌨𑌕𑌾𑌦𑌯𑌃 ।

கர்மணைவ ஹி ஸம்ஸித்திம் ஆஸ்திதா ஜநகாதய: ।

என்று கீதையில் கூறியபடி தர்மப்ரதானமான விதேஹ வம்சத்தில் உதித்த ஜனகமகாராஜனே என் பிதாவாக ஆவார் எனக்கு ஸீதையென்று காரணப் பெயர் விளங்கி வருகிறது. ஏதோ என்னுடைய ஜன்மாந்தரத்திலுள்ள தபோ மஹிமையினால் ஸ்ரீமானான ராமனை நான் பர்த்தாவாக அடைந்தேன். நான ராம பத்தினிதான். ராமனுக்கும் எனக்கும் விவாகம் நடந்த பிறகு பன்னிரண்டு வருஷகாலம் பர்த்ரு க்ருஹத்தில் ஸகலவிதமான போகோபகரண ஸம்ருத்தியோடு கூடியவளாய்கொண்டு அமானுஷமான போகங்களை நான் அனுபவித்தேன். அந்த விஷயத்திலும் என்னைப்போல் பாக்யவதி மற்றொருவள் இருக்கிறாள் என்று சொல்லமுடியாது. பதிமூன்றாவது வருஷ ஆரம்பத்தில் என் மாமனாரான தசரத ராஜன் என் பர்த்தாவான ராமனுக்கு இக்ஷ்வாகு வம்ச ராஜ்ய ஸ்ரீயை பட்டாபிஷேகம் செய்வதாகத் தீர்மானித்து அபிஷேகத்திற்கு உபயோகமான ஸம்பாரங்களை ஸுமந்த்ரர் மூலமாக சேகரிக்கும்படி ஏற்பாடு செய்தார். அதைப் பார்த்து கைகேயி தேவியானவள் தசரத சக்ரவர்த்தியினிடம் என் பர்த்தாவிற்கு ராஜ்யாபிஷேகத்தைச் செய்யாமலிருக்கும்படி தடுத்தாள்.

न पिबेयं न खादेयं प्रत्यहं मम भोजनम् ।
एष मे जीवितास्यान्त: रामो यद्यभिषिच्यते ॥

𑌨 𑌪𑌿𑌬𑍇𑌯𑌂 𑌨 𑌖𑌾𑌦𑍇𑌯𑌂 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌹𑌂 𑌮𑌮 𑌭𑍋𑌜𑌨𑌮𑍍 ।
𑌏𑌷 𑌮𑍇 𑌜𑍀𑌵𑌿𑌤𑌸𑍍𑌯𑌾𑌨𑍍𑌤𑌃 𑌰𑌾𑌮𑍋 𑌯𑌦𑍍𑌯𑌭𑌿𑌷𑌿𑌚𑍍𑌯𑌤𑍇 ॥

*ந பிபேயம் ந காதேயம் ப்ரத்யஹம் மம போஜநம் ।*

*ஏஷ மே ஜீவிதாஸ்யாந்த: ராமோ யத்யபிஷிச்யதே ॥*

என்று வ்ருத்தாப்பிய தசையில் தசரத சக்ரவர்த்தியை கைகேயி தேவியானவள் கொஞ்சமேனும் பர்த்தா என்ற மான்யதா புத்தியைப் பாராட்டாமல் 'நான் போஜனம் செய்யமாட்டேன்; நீர் அருந்தமாட்டேன், ராமனுக்குப் பட்டாபிஷேகம் நடந்தால் அந்த நிமிஷத்தில் என்னுடைய ப்ராணனுக்கு வியோகம் ஏற்பட்டுவிட்டது என்பதை நிச்சயமாக அறிந்துகொள்ளலாம். ராமனை அரண்யம் போகும்படி செய்யவேண்டும். முன்காலத்தில் சம்பராஸுரனோடு தாங்கள் யுத்தம் செய்யும்பொழுது சம்பராஸுரன் மூலமாக தங்களுக்கு இரண்டு தடவை ஏற்பட்ட ப்ராண விபத்தை நான் ஸாரத்யம் செய்யும்பொழுது ஹஸ்தலாகவத்தினால் ரதத்தைத் திருப்பி தங்களுடைய உயிரைக் காப்பாற்றியதற்கு இரண்டு வரங்கள் எனக்கு அளித்தீர்களல்லவா? அந்த இரண்டையும் குறிப்பிட்டு இதுவரையில் தங்களிடத்திலிருந்து நான் வாங்கிக்கொள்ளவில்லை. இப்பொழுது எனக்கு அந்த இரண்டும் அவசயமாக இருக்கிறது. அதில் ஒன்று ராமனுக்கு வனவாஸம், மற்றொன்று என் புத்ரனான பரதனுக்கு ராஜ்யாபிஷேகம்' என்று நிர்ப்பந்தப் படுத்தினாள். ராஜனான தசரதரோ ஸத்ய ஸந்தனானதினால் ஸத்தியத்தினின்றும் நழுவ ஸம்மதமில்லாமல் கஷ்டப்படும்போது, ப்ரிய புத்ரனான ராமர் பரதனுக்கு ராஜ்யத்தைக் கொடுக்கும்படி யாசித்துவிட்டு ராஜ்யாபிஷேகத்தைக் காட்டிலும் அனேக மஹான்களுடைய தர்சனத்திற்கு ஹேது பூதமான வனவாஸமானது தனக்கு மேலான ப்ரியத்தைக் கொடுக்கக் கூடியதானதினால் பித்ரு வாக்ய பரிபாலனம் என்ற வ்யாஜத்தை வைத்துக்கொண்டு ஆரண்யத்திற்கு வந்தார்.

दद्यात् न प्रतिगृह्णीयात् न ब्रूयात्किञ्चिदप्रियम् ।

अपि जीवितहेतोर्वा रामस्सत्यपराक्रमः ॥

𑌦𑌦𑍍𑌯𑌾𑌨𑍍 𑌨 𑌪𑍍𑌰𑌤𑌿𑌗𑍃𑌹𑍍𑌣𑍀𑌯𑌾𑌨𑍍 𑌨 𑌬𑍍𑌰𑍂𑌯𑌾𑌤𑍍𑌕𑌿𑌞𑍍𑌚𑌿𑌦𑌪𑍍𑌰𑌿𑌯𑌮𑍍 ।
𑌅𑌪𑌿 𑌜𑍀𑌵𑌿𑌤𑌹𑍇𑌤𑍋𑌰𑍍𑌵𑌾 𑌰𑌾𑌮𑌸𑍍𑌸𑌤𑍍𑌯𑌪𑌰𑌾𑌕𑍍𑌰𑌮𑌃 ॥

தத்யாத் ந ப்ரதிக்ருண்ஹீயாத் ந ப்ரூயாத் கிஞ்சிதப்ரியம் ।
அபி ஜீவிதஹேதோர்வா ராமஸ்ஸத்யபராக்ரம: ॥

என்றபடி தன்னிடம் வந்தவர்களுக்கு அபீஷ்டத்தைக் கொடுப்பதே ராமருடைய ஸ்வபாவமாகும். தான் ஒருவனிட மிருந்தும் கையை நீட்டி வாங்குகிறதில்லை. ஒருவனுக்கும் அப்ரியமான செய்கையைத் த்ரிகரணத்திலும் செய்ய மாட்டார். அப்ரியமாக வாக்கினாலும் வார்த்தையைக் கூற மாட்டார். தன்னுடைய ஜீவிதத்திற்கே ஹானி வரக்கூடிய தானாலும் மேற்சொன்ன ஸ்வபாவத்தினின்று கொஞ்சமே னும் நழுவமாட்டார். பராக்ரமத்திலும் பரமார்த்தமான பராக்ரமத்தோடு கூடினவர். அதனால் ராஜனுடைய ஆக்ஞை ஆனவுடன் தனது உத்தரீய வஸ்த்ரத்தைக்கூட கைகேயி தேவிக்கெதிரில் எறிந்துவிட்டு ஆரண்யத்திற்கு கிளம்பிவிட்டார். என்னை மாதாவிற்குப் பரிசர்யைகள் செய்து கொண்டு கௌஸல்யா தேவியினுடைய ஸமீபத்திலிருக்கும் படி ஆக்ஞாபித்தார். ஆகிலும் ராமனைவிட்டுப்பிரிந்து ஸ்வர்க் கத்திலும் எனக்கு வாஸம் செய்வதில் த்ருப்தி இல்லாதவளா னதினால், ராமனுக்கு முன்பே நான் ஆரண்யத்திற்கு கிளம்பி விட்டேன். லக்ஷ்மண ஸ்வாமியும் எனக்கு முன்பே கிளம்பி விட்டார்.

இவ்விதம் நாங்கள் மூன்று பேரும் ஆரண்யத்தில் வந்து தண்டகாரண்யத்தில் வாஸம் செய்தோம். ராக்ஷஸனான ராவணனே, ராமலக்ஷ்மணர்களை மாயாம்ருக மூலமாக வெகு தூரம் செல்லும்படி செய்துவிட்டு நான் தனியாக இருக்கும் பொழுது என்னை அபஹரித்துக்கொண்டு வந்துவிட்டான். அந்த ராவணன் எனக்குக் கொடுத்த அவதிகளில் பாக்கி இருக்கும் காலம் இரண்டு மாதங்கள்தான். அதற்குள் நான் அவனுக்கு வசமாகாது போனால் என்னை அவன் சின்னபின்

ணமாகச் செய்துவிடுவான். இதுதான் என்னுடைய வ்ருத்தாந்த" மென்று ஸீதை ஆஞ்ஜனேயஸ்வாமியினிடத்தில் தன்னுடைய வரலாற்றைக் கூறினாள்.

ஸீதையினுடைய வார்த்தையைக் கேட்டவுடனே ஆஞ்ஜனேயஸ்வாமியானவர், ஸீதையினிடம் ஸாந்த்வ வசனத்தைச் சொல்லுகிறார் :

अहं रामस्य संदेशात् देवि दूतस्तवागतः ।
वैदेहि कुशली रामः त्वाञ्च कौशलमब्रवीत् ॥

𑌅𑌹𑌂 𑌰𑌾𑌮𑌸𑍍𑌯 𑌸𑌂𑌦𑍇𑌶𑌾𑌤𑍍 𑌦𑍇𑌵𑌿 𑌦𑍂𑌤𑌸𑍍𑌤𑌵𑌾𑌗𑌤𑌃 ।
𑌵𑍈𑌦𑍇𑌹𑌿 𑌕𑍁𑌶𑌲𑍀 𑌰𑌾𑌮𑌃 𑌤𑍍𑌵𑌾𑌞𑍍𑌚 𑌕𑍌𑌶𑌲𑌮𑌬𑍍𑌰𑌵𑍀𑌤𑍍 ॥

அஹம் ராமஸ்ய ஸந்தேசாத் தேவி தூதஸ்தவாகத: ।
வைதேஹி குசலீ ராம: த்வாஞ்ச கௌசலமப்ரவீத் ॥

“ஹே ஸீதே, நான் ராமனுடைய தூதன்; ராமனுக்கு தூதனானதினால் உனக்கும் நான் தூதனாக ஆகிவிட்டேன், ராமருடைய ஆக்ஞையினால் உன்னிடம் நான் வந்திருக்கிறேன். ராமன் க்ஷேமமாகவே இருக்கிறார். உன்னுடைய க்ஷேமத்தையும் தெரிந்துகொண்டு வரச்சொன்னார்.

यो ब्राह्ममस्त्रं वेदांश्च वेद वेदविदां वरः ।
स त्वां दाशरथी रामः देवि कौशलमब्रवीत् ॥
लक्ष्मणश्च महातेजाः भर्तुस्ते अनुचरः प्रियः ।
कृतवान्शोकसन्तप्तः शिरसा तेऽभिवादनम् ॥

𑌯𑍋 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌮𑌸𑍍𑌤𑍍𑌰𑌂 𑌵𑍇𑌦𑌾𑌂𑌶𑍍𑌚 𑌵𑍇𑌦 𑌵𑍇𑌦𑌵𑌿𑌦𑌾𑌂 𑌵𑌰𑌃 ।
𑌸 𑌤𑍍𑌵𑌾𑌂 𑌦𑌾𑌶𑌰𑌥𑍀 𑌰𑌾𑌮𑌃 𑌦𑍇𑌵𑌿 𑌕𑍌𑌶𑌲𑌮𑌬𑍍𑌰𑌵𑍀𑌤𑍍 ॥
𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑌣𑌶𑍍𑌚 𑌮𑌹𑌾𑌤𑍇𑌜𑌾𑌃 𑌭𑌰𑍍𑌤𑍁𑌸𑍍𑌤𑍇 𑌅𑌨𑍁𑌚𑌰𑌃 𑌪𑍍𑌰𑌿𑌯𑌃 ।
𑌕𑍃𑌤𑌵𑌾𑌞𑍍𑌶𑍋𑌕𑌸𑌨𑍍𑌤𑌪𑍍𑌤𑌃 𑌶𑌿𑌰𑌸𑌾 𑌤𑍇𑌽𑌭𑌿𑌵𑌾𑌦𑌨𑌮𑍍 ॥

யோ ப்ராஹ்மமஸ்த்ரம் வேதாம்ச்ச வேத வேதவிதாம் வர: ।
ஸ த்வாம் தாசரதீ ராம: தேவீ கௌசலமப்ரவீத் ॥
லக்ஷ்மணச்ச மஹாதேஜா: பர்துஸ்தே அநுசர: ப்ரிய: ।
க்ருதாஞ்சோகஸந்தப்த: சிரஸா தேபிவாதகம் ॥

வேதார்த்த ஞானத்தோடு கூடினவர்களுக்குள், எந்த ராமன் முதன்மையாகச் சொல்லக்கூடிய மஹிமையோடு கூடினவரோ, ப்ரும்மாஸ்த்ரத்தினுடைய தத்வம் எந்த ராமனுக்குத்தான் தெரியுமோ, வேதத்தில் கூறப்பட்ட ஸர்வ கர்மங்களினுடைய பாரத்தையும் எந்த மஹானுபாவன் அடைந்தாரோ, அந்த ராமன், உன்னிடம் க்ஷேமத்தைத் தெரிவிக்கச் சொன்னார். ராமனுக்கு மிகவும் ப்ரீதிபாத்ரமான லக்ஷ்மணனும் உன்னிடத்தில் தலைவணங்கி நமஸ்காரம் செய்து க்ஷேமத்தைத் தெரிவிக்கச்சொன்னார்"

இவ்விதம் சொன்ன ஹனுமாருடைய வார்த்தையை ஸீதை கேட்டதும் பரம ஸந்தோஷத்துடன் ஆஞ்ஜனேயரைப் பார்த்துச் சொல்லுகிறாள். "ஹனுமன் !

कल्याणी व्रत गाथेयं लौकिकी प्रतिभातिमां ।
एति जीवन्तमानन्दः नरं वर्षशतादपि ॥

கமுூாணீ வூத மாமெயம் ுளகிகீ வூதிஹாதிஊம ।
ஊ தி ஜீவஞஊாநக: நுரம வஷஊஶ்ஶதாவி ॥

கல்யாணீ வ்ரத காதேயம் லௌகிகீ ப்ரதிபாதிமாம் ।
ஏதி ஜீவந்தமாநந்த: நரம் வர்ஷசதாதபி ॥

"ஆயிரக்கணக்கான வருஷங்களாக துக்கத்தை ஒரு மனிதன் அநுபவித்து வந்தாலும், எந்த மனிதனும் பாவி காலத்தில் ஆனந்தத்தை அனுபவிப்பான் என்ற கதையானது என் விஷயத்தில் ஸத்யமாக ஆகிவிட்டது. நான் அனுபவித்த துக்கத்தைப்போல் யாரும் இனி அனுபவிக்கப் போவதில்லை. அப்பேர்ப்பட்ட எனக்கு பாவி ஸௌபாக்ய ஸூசகமாக தங்களுடைய நல்வரவு ஏற்பட்டு ராமலக்ஷ்மணர்களு

டைய குசலவ்ருத்தாந்தத்தைக் கேழ்க்கும்படியான பாக்யத்தை அடைந்தேனல்லவா. இதைக் காட்டிலும் அந்த லௌகிகமான பழமொழிக்கு வேறு உதாஹரணம் வேணடுமா ?" என்று கூறினுள்.

இப்படி சொல்லிவிட்டு ஹனுமாருடைய விஷயத்தில் ஸீதையினுல் அத்புதமான ஒரு ஆனந்தமானது அனுபவிக்கப்பட்டது. பரஸ்பரம் இருவர்களுக்கும் நம்பிக்கை ஏற்பட்டு, பேச ஆரம்பித்தார்கள். ஆகிலும் ராக்ஷஸனுடைய நகரம் ஆனதினுல் ராவணனுடைய தௌஷ்ட்யத்தையும் கவனிக்கும்பொழுது ஆஞ்ஜநேய ஸ்வாமியானவர் தன்னுடைய ஸமீபத்திற்கு எவ்வளவுக்கு எவ்வளவு நெருங்கினுரோ, அவ்வளவுக்கு அவ்வளவு பயம் ஏற்பட்டு, ராவணன்தான் இந்த உருவமாக வேஷத்தைத் தரித்துக்கொண்டு நம்மை வ்யாமோகப்படுத்துகிருனே என்றும் ஸீதைக்கு தோன்றியது. அதனுல் அஹோ கஷ்டமென்று ஸீதையானவள் மிகுந்த வ்யஸனத்தை அடைந்து சிட்சுபாவ்ருக்ஷத்தினுடைய கிளையைப் பிடித்துக்கொண்டிருந்தவள் அந்தக் கிளையை விட்டு விட்டுப் பூமியில் உட்கார்ந்துகொண்டு மௌனமாக இருந்துவிட்டாள். மறுபடி ஆஞ்ஜநேய ஸ்வாமியை கவனிக்கவே இல்லை. ஆஞ்ஜநேய ஸ்வாமியோ ஸாஷ்டாங்கமாக ஸீதைக்கு நமஸ்காரத்தைச் செய்து என்னிடத்தில் யாதொரு விதமான சங்கையையும் அடையவேண்டாம் என்று தெரிவித்துக்கொண்டார். ஸீதையோ நீ மஹா மாயாவியான ராவணனேதான், எதற்காக என்னைத் தவிக்கச் செய்கிருய். அது உனக்கு அழகல்ல, உன்னுடைய குலமே நசித்துவிடும். ஜனஸ்தானத்தில் உன்னுடைய நிஜமான ராக்ஷஸ உருவை மறைத்து வைத்துக்கொண்டு த்ரிதண்டியான ஸந்யாஸி போல் வேஷத்தை ஸ்வீகரித்துக்கொண்டும் என்னை நீ அபஹரித்த பாபியன்றே, அந்த ராவணன்தான் நீ, உபவாஸத்தினுல் த்ருசமாயும், பர்த்தாவை விட்டுப் பிரிந்ததினுல் தைன்ய ஸ்வபாவத்தோடும் கூடிய என்னை இவ்விதம் தவிர்க்கச்

செய்வது ந்யாயமாக ஆகாதே என்று வெகு ப்ரகாசமாக ஆஞ்ஜநேய ஸ்வாமியைப் பார்த்து ராவணன்தான் என்ற சங்கையை அடைந்து ஸீதா தேவியானவள் பயந்தாள்.

பிறகு ஆஞ்ஜநேய ஸ்வாமியைப் பார்த்தமாத்திரத்தில் தன்னுடைய மனதில் ஏற்பட்ட ப்ரஸன்னதையென்ற லிங்கத்தினால் ராவணன் என்ற சங்கையை உதறித் தள்ளிவிட்டு ஏன் ராமதூதனாகத்தான் இருக்கக் கூடாது என்ற எண்ணத்துடன் ஆஞ்ஜநேய ஸ்வாமியைப் பார்த்துச் சொல்லுகிறாள்.

“ஹே! ஆஞ்ஜநேயரே, நீர் ராமனால் அனுப்பட்ட தூதனென்பது வாஸ்தவமானால் ராமனைப்பற்றியுள்ள சில கேழ்விகள் உம்மிடத்தில் கேழ்க்கிறேன். ராம கதையைக் கேட்பதில் எனக்கு மிகுந்த ப்ரியமுண்டு என்னுடைய ப்ரியனை ராமனுடைய கல்யாண குணங்களை விவரமாக எடுத்துச்சொல்லு. நதீ ப்ரவாஹமானது கரையை உடைத்துக் கொண்டு போவது போல் ராமனுடைய கல்யாண குணங்கள் என்னுடைய மனதை அபஹரிக்கின்றது. ஸ்வப்னத்திலும் ராமனை நான் கண்டால் பரமானந்தத்தை அனுபவிப்பேன், ஸ்வப்னமும் எனக்குச் சத்ருவாக ஆகிவிட்டது. நீர் வந்து ராமனுடைய கல்யாண குணத்தை என்னிடத்தில் வர்ணிப்பது ஸ்வப்னமோ என்றும் நான் நினைக்க ந்யாயமில்லை. வானர ஜாதியில் பிறந்த உம்மை ஸ்வப்னத்தில் பார்த்து நான் க்ஷேமத்தை அடைய முடியுமா? தத்காலத்திலோ என் மனதிற்கு அத்புதமான ப்ரீதி விசேஷம் ஏற்பட்டிருக்கிறது. ஸௌபாக்யத்தை ஸுசிப்பிக்க கூடிய சில சுபநிமித்தங்களையும் காண்கிறேன். ஆகையினால் நீர்வந்து பேசினதும் ஸ்வப்னமில்லை. ஒரு ஸமயம் மனதினுடைய ப்ரமமாக இருக்கலாமென்றாலோ மனதினுடைய ப்ரமமாகவோ அல்லது இல்லாத விஷயத்தை இருப்பதுபோல் பாவிக்கச் செய்கிற மனதினுடைய ஸங்கல்பமாகிற வாயுவினுடைய கதிவிசேஷமோ, பர்த்தாவைவிட்டுப் பிரிந்ததினால்

ஸ்த்ரீகளுக்கு ஏற்படும் ப்ராந்தியான உன்மாதமோ இப்படிப்பட்ட மனதினுடைய வ்ருத்தி விசேஷங்களில் ஏதாவது ஒன்ருக இருக்கும் என்று யோசித்தாலும் அவைகளும் இல்லே. அவைகளெல்லாம் ஆச்ரயமான புருஷனே வ்யாமோகப் படுத்திவிடும். எனக்கோ என்னுடைய ஸ்ம்ருதிக்கு யாதொரு விதமான குறைவும் வரவில்லே. ஆகையினுல் ராவணன் காமரூபியானதினுல் ராக்ஷஸ ராஜஞன ராவணனுகத்தான் இருக்கவேண்டும் என்று தீர்மானித்துக் கூறிவிட்டு மறுபடியும் மௌன முத்திரையையே தரித்தாள். ஆஞ்ஜநேய ஸ்வாமியோ, ஸீதையினுடைய ஸந்தேகத்தை நிவ்ருத்திச் செய்துவைக்க ச்ரோத் ரேந்த்ரியத்திற்கு இன்மையைக் கொடுக்கக் கூடிய ராமனுடைய கல்யாண குணங்களே எடுத்து வர்ணிக்க ஆரம்பித்தார். "ஹே பரதேவதையே ராமனே ஸூர்யபகவானைப்போல் மஹாதேஜஸ்வி. சந்த்ரனைப்போல் ஸர்வ ப்ராணிகளுக்கும் ஆஹ்லாதத்தை உண்டு பண்ணக்கூடியவன். குபேரனைப்போல் ஸர்வ லோகத்திற்கும் அரசன். மஹாவிஷ்ணுவைப்போல் அபரிமிதமான பராக்ரமத்தோடு கூடினவன். மஹாயசஸ்வீ, ப்ருஹஸ்பதி பகவானைப்போல் ஸத்யவாதியும், மதுரமாகப் பேசுகிறவனும் கூட மிகவும் ஸௌந்தர்யத்தோடு கூடி விளங்குபவன் மன்மதன்தானே என்று சொல்லக்கூடிய நிலேயில் பாஸிக்கிறவன். அபரிமிதமான காந்தியினுல் ஜ்வலிக்கின்றவன். பரமஸௌபாக்யத்திற்கு இருப்பிடமான வஸ்து. அவச்யம் அங்கீகரிக்க வேண்டிய ஸந்தர்ப்பத்தில் கோபத்தை ஸ்வீகரிப்பான்; தண்டிக்கவேண்டியவனே தண்டிப்பான்; உலகத்திலேயே பரமச்ரேஷ்டனென்று சொல்லக் கூடியவன். இந்தப் பதினன்கு உலகங்களும் அவனுடைய கை நெடில்களுக்குள் அடங்கிவிட்டது. மாயா ம்ருகத்தினுல் அவ்வித மஹிமையுள்ள ப்ரபுவை வெகுதூரத்திற்கப்பால் போகும்படி செய்துவிட்டு எந்த மஹாபாவியினுல் நீ அபஹரிக்கப்பட்டாயோ அந்த மஹாபாவிக்கு அதிசீக்கிரத்தில் கிடைக்கும் பலனேயும் நீ பார்க்கலாம். மஹா கோபத்தோடு

வில்லிலிருந்தும் தொடுத்துவிடப்பட்ட பாணங்களினுல் ராவணனை எந்த ராமன் வதிக்கப் போகின்ருரோ அந்த ராமனுல் அனுப்பப்பட்ட தூதன்தான் நான். அது ஸத்தியமே, என்னிடத்தில் வீணுக சங்கையை அடைய வேண்டாம், உன்னை விட்டுப் பிரிந்ததிலிருந்து ராமன் துக்கஸாகரத்தில் மூழ்கிக் கொண்டு வருகிருர். மஹா தேஜஸ்வியான லக்ஷ்மணனும் உனக்கபிவாதனம் செய்து குசலப்ரச்னம் செய்யச் சொன்ஞர். ராமருக்கு ஸகாவாயிருக்கும் வானர ராஜஞன ஸுக்ரீவனும் உனக்கு க்ஷேமத்தைத் தெரிவித்துக்கொண்டார். ஸுக்ரீவனேடு தினந்தோறும் உன்னுடைய கதையைத் தான் ராமன் ஸ்மரித்துக்கொண்டு உன்னைப்பற்றியே சொல்லிக்கொண்டிருக்கிருர். அதிசீக்கிர காலத்தில் ராமலக்ஷ்மணர்களை நீ பார்க்கலாம். கோடிக்கணக்கான வானர ஸேனைகளுக்கு மத்தியில் விளங்கும் ஸுக்கிரீவனையும் பார்க்கலாம் நான் ஸுக்ரீவனுடைய மந்திரியாவேன். உன்னைத் தேடுவதற்காக ஸமுத்ரத்தைத் தாண்டி லங்கா நகரத்திற்குள் அனுப்ரவேசம் செய்தேன். சத்ருவான ராவணனுடைய சிரஸ்ஸில் இடது காலை வைத்துக்கொண்டு நான் லங்கைக்குள் நுழைந்தேன். அதனுல் நமக்கு ஜயம்தான் ஏற்படப்போகிறது. நீ என்னை ராவணனென்று கொஞ்சமேனும் சந்தேகப்படவேண்டாம் என்னுடைய வார்த்தையில் நம்பிக்கையை வைக்கவேண்டும் என்று ப்ரார்த்தித்துக்கொண்டார்.

அதைக்கேட்ட ஸீதை ஆஞ்ஜநேய ஸ்வாமியைப் பார்த்து ராமரோடு உமக்கு ஸம்பந்தம் ஏறபடக் காரணமென்ன, எங்கே ஏற்பட்டது? குரங்குகளுக்கும் மனிதர்களுக்கும் ஸ்நேகம் ஏற்படுமா ? ராமருக்கோ லக்ஷ்மணருக்கோ என்ன அடையாளங்கள். ராமருடைய அவயவ விசேஷங்கள் எவ்விதமானவை; ராமருடைய கைகள் துடைகள் முதலியவை எப்படி விளங்குகின்றன ? அப்படியே லக்ஷ்மணனுடைய அஸாதாரணமான அடையாளங்களென்ன என்று கேட்டாள்?

ஆஞ்ஜநேய ஸ்வாமியும் ஸீதையினுடைய ப்ரசனத்திற்கு அனுகுணமாக ராமருடைய ஸ்வரூபத்தை எடுத்து உரைக்க ஆரம்பித்தார்.

"ஹே ஸீதே, ராமருடைய சரீர ஸம்ஸ்தான விசேஷத்தையும் லக்ஷ்மணனுடைய அடையாளங்களையும், நான் ராம தூதன்தானு என்று பரீக்ஷிக்க நீ கேழ்க்கிருய், உனக்கெதிரில் அவைகளையெடுத்துக் கூறும்படியான பாக்யம் எனக்கு ஏற்பட்டதிலும் ஸந்தோஷமே; ராமனுடைய அடையாளங்கள் எவைகளோ அவ்விதமே லக்ஷ்மணனுடைய அடையாளங்கள். அவைகளை எனக்குத் தெரிந்தமட்டில் நான் எடுத்து உரைக்கிறேன். அதைக்கேட்ட பிறகாவது இவன் ராமதூதன்தானு என்று நம்பிக்கையை அடைவாயோ என்று பார்க்கிறேன் என்று சொல்லிவிட்டு ராமருடைய கல்யாண குணங்களைச் சொல்ல ஆரம்பித்தார்.

राम: कमलपत्राक्ष: सर्वसत्वमनोहर: ।
रूप दाक्षिण्य सम्पन्न: प्रसूतो जनकात्मजे ॥

𑌰𑌾𑌮𑌃 𑌕𑌮𑌲𑌪𑌤𑍍𑌰𑌾𑌕𑍍𑌷𑌃 𑌸𑌰𑍍𑌵𑌸𑌤𑍍𑌵𑌮𑌨𑍋𑌹𑌰𑌃 ।
𑌰𑍂𑌪𑌦𑌾𑌕𑍍𑌷𑌿𑌣𑍍𑌯 𑌸𑌮𑍍𑌪𑌨𑍍𑌨𑌃 𑌪𑍍𑌰𑌸𑍂𑌤𑍋 𑌜𑌨𑌕𑌾𑌤𑍍𑌮𑌜𑍇 ॥

**ராம: கமலபத்ராக்ஷ: ஸர்வஸத்வமனோஹர: ।**
**ரூபதாக்ஷிண்ய ஸம்பந்ந: ப்ரஸூதோ ஜநகாத்மஜே ॥**

"ராமரோ ஸர்வப்ராணிகளையும் ரமிக்கச்செய்யும் ஸர்வாங்க ஸௌந்தர்யத்தோடு கூடினவர் ராமருடைய எந்த அவயவங்களைப் பார்த்தாலும் அவைகளில் ஸௌந்தர்ய லக்ஷ்மியானவள் நடனம் செய்கின்ருள் என்பதில் ஸந்தேஹமேயில்லை அத்துடன் கமல பத்ராக்ஷன்; செந்தாமரைக் கண்ணன், நதிப்ரவாஹத்தின் நடுவிலுள்ள சுழலைப்போல் ராமருடைய தேஹ ஸம்பந்தமான காந்தியாகிற ப்ரவாகத்தில் ப்ராணிகளுடைய த்ருஷ்டியையும் மனதையும் ஆகர்

ஷித்து ப்ரவாஹத்திற்குள் மூழ்கும்படி செய்கிற சுழலைப் போல் நேத்ரங்களின் சோபையானது விளங்கி வருகின்றது. அவ்விதமான நேத்திரத்தின் ஸௌந்தர்யத்திற்கு ஆஸ்தான பூமியாகவே பகவான் விளங்கி வருகிறார் என்பதில் ஆக்ஷேப ணையே இல்லை. सर्वसत्वमनोहर: ( ஸவஸத்வமநோஹர: ) (ஸர்வஸத்வமனோஹர:) எல்லாப் பிராணிகளுடைய மன தையும் அபஹரிக்கின்றவர்; நானோ திக்யக் ஜாதியில் பிறந்த வன், வ்ருக்ஷத்தில் ஒரு கிளையினின்றும் மற்றொன்றுக்குத் தாவுகின்ற சஞ்சல ஸ்வபாவத்தோடு கூடியவன். ஸாமான் யம் விசேஷம் என்ற விபாகத்தை அறியாதவன். அப்பேர்ப் பட்ட என்னுடைய சித்தத்தைக்கூட அபஹரித்துவிட்டார். ராமர் தன்னுடைய ஸௌந்தர்யத்தினால் என் சித்தத்தையும் அபஹரித்தக் காரணத்தினால்தான் என் சித்தம் என்னு டைய மதீனத்திலில்லாததினால் நாம் ராமருக்கு தூதனாக ஆகிவிட்டேன். தவிறவும் रूपदाक्षिण्यसम्पन्न: (ரூபதாக்ஷிண்ய ஸம்பந்ந:) (ரூபதாக்ஷிண்யஸம்பந்ந:) என்றதினால் தேஹத் திலுள்ள ஸகல ரூபங்களையும் க்ரஹித்துக் கொள்ள வேண்டும். தாக்ஷிண்யம் என்பதினால் ஆத்ம குணங்கள் யாவற்றையும் வாங்கிக்கொள்ள வேண்டும். தேஹ குணங் களாலும் ஆத்ம குணங்களாலும் நிறைந்தவன் என்ற அர்த்தமும் வெளியாகிறது, இந்த குணங்களெல்லாம், ராமன் அவதரித்த பிறகு செயற்கையினால் வந்தவை யல்ல प्रसूत: (ப்ரஸூத:) (ப்ரஸூத:) அதாவது ஔத் பத்திகம், அக்னிக்கு ஔஷ்ண்யம்போல் ஸஹஜமாகப் பிறப்பிலேயே உண்டான குணங்களாகும். ஆனால் மிகவும் மேலானவனாக ராமனை நான் வர்ணித்ததினால் அந்த ராம னுக்கு ஸமானமாக மற்றொருவன் இருக்கின்றானா இல்லையா என்று ஸந்தேஹம் ஏற்பட்டால் அதை நிவ்ருத்தி செய்ய ராமனுக்கு ஸமானமான குணங்களோடு கூடிய மற்றொருவர் தாங்கள்தானென்று தங்களைத்தான் சொல்ல முடியும் என்ற அபிப்ராயத்தை "ஹே ஜனகாத்மஜே" என்றதினால் தெரிவித் துக்கொண்டார்.

பகவானுடைய அவதாரத்தில் பிறப்போடுகூடவே தேஹ குணங்கள் ஆத்ம குணங்கள் இவை உண்டானது என்று சொல்வதிலிருந்தும் उत्पन्नं द्रव्यं क्षणं अगुणं तिष्ठति (உத்பன்னம் த்ரவ்யம் க்ஷணம் அகுணம் திஷ்டதி) (உத்பந்நம் த்ரவ்யம் க்ஷணம் அகுணம் திஷ்டதி) என்ற நையாயிக மதமானது வேத பாஹ்ய மதமானதினால், ச்ரேயஸ்ஸை விரும்புகிறவர்கள் அதை ஆதரிக்கக் கூடாது என்ற ரஹஸ்யமும் வெளியாகிறது. அத்துடன் தேஜஸ்ஸில் ஸூர்யனுக்கு ஸமானமானவன். பொறுமையில ப்ருத்விக்கு ஸமானமானவன், புத்தியில் ப்ருஹஸ்பதியை வெல்லக் கூடியவன், யஜஸ்ஸில் தேவேந்த்ரனை ஒற்றவன், ஸகல ஜீவகோடிகளையும ரக்ஷிப்பவன், ஸவஜனங்களையும் காப்பாற்றுபவன்; ஸதாசாரத்தை ரக்ஷிக்கிறவன், தர்ம தேவதையைப் பரிபாலிக்கிறவன் தர்ம விரோதிகளான சத்ருக்களைத் தவிக்கச் செய்பவன். ப்ராஹ்மணன் க்ஷத்திரியன் வைச்யன் சூத்ரன் என்ற நான்கு வர்ணங்களையும், மந்த்ரத்வ வர்ணங்களுக்கு உசிதமான தர்மங்களையும் கொஞ்சமேனும் அதற்குக் குறைவு வராமல் ரக்ஷிப்பவன், ஸகலவிதமான சாஸ்த்ரீய வ்யவஸ்தைகளையும் உலகத்தில் ப்ரசாரம் செய்து ப்ராணிகளை அனுஷ்டிக்கச் செய்கிறவன்; ப்ரம்மவாச்சஸ்ஸோடு கூடினவன். ப்ரம்மசர்ய வ்ரதத்தைக் கைவிடாமல் அனுஷ்டிக்கிறவன்; ஸஜ்ஜனங்களுக்கு உபகாரம் செய்கிறவன் ஸத் கர்மாவை உலகத்தில் நிலைநாட்டுகிறவன். ஆன்வீக்ஷிகி, த்ரயீ, வார்த்தா தண்டம் நீதி என்ற ராஜவித்யைகளான நான்கு சாஸ்த்ரங்களையும் அப்யாஸம் செய்தவன். ப்ராம்மணர்களிடம் பரம பக்தியோடு கூடியவன் ஸகல சாஸ்தரங்களையும்அறிந்தவன். ஸௌசீல்யத்தோடுகூடினவன் மிகவும் அதிகமான வினயத்தைக் கைகொண்டவன் தன் வேதமான யஜுர் வேதத்திலும், மற்ற வேதங்களிலும் பாண்டித்யம் உள்ளவன் தனுர் வேதங்களிலும் பாண்டித்யம் உள்ளவன் தனுர் வேதங்களில் அபாரமான ஸாமர்த்தியத்தோடு கூடினவன் சிக்ஷா, கல்பம், வ்யாகரணம் நிருக்தம், சந்தஸ், ஜ்யோதிஷம், முதலிய வேதங்களாகிற ஆறுகளிலும்

மஹா பாண்டியத்தோடு கூடினவன் என்று ராமனுடைய ஆத்ம குணங்களை ஆஞ்ஜனேய ஸ்வாமியானவர் விஸ்தாரமாக வர்ணித்தார். தேஹ குணங்களைப்பற்றி விஸ்தரிக்க ஆரம்பிக்கிறார் :

विपुलांसो महाबाहुः कम्बुग्रीवः शुभाननः ।
गूढजत्रुः सुताम्राक्षो रामो देवि जनैः श्रुतः ॥
दुन्दुभिस्वननिर्घोषः स्निग्धवर्णः प्रतापवान् ।
समः समविभक्ताङ्गः वर्णं श्यामं समाश्रितः ॥
त्रिस्थिरः त्रिप्रलम्बश्च त्रिसमः त्रिषु चोन्नतः ।
त्रिताम्रः त्रिषु च स्निग्धः गम्भीरस्त्रिषु नित्यशः ॥

𑌵𑌿𑌪𑍁𑌲𑌾𑌂𑌸𑍋 𑌮𑌹𑌾𑌬𑌾𑌹𑍁𑌃 𑌕𑌮𑍍𑌬𑍁𑌗𑍍𑌰𑍀𑌵𑌃 𑌶𑍁𑌭𑌾𑌨𑌨𑌃 ।
𑌗𑍂𑌢𑌜𑌤𑍍𑌰𑍁𑌃 𑌸𑍁𑌤𑌾𑌮𑍍𑌰𑌾𑌕𑍍𑌷𑍋 𑌰𑌾𑌮𑍋 𑌦𑍇𑌵𑌿 𑌜𑌨𑍈𑌃 𑌶𑍍𑌰𑍁𑌤𑌃 ॥
𑌦𑍁𑌨𑍍𑌦𑍁𑌭𑌿𑌸𑍍𑌵𑌨𑌨𑌿𑌰𑍍𑌘𑍋𑌷𑌃 𑌸𑍍𑌨𑌿𑌗𑍍𑌧𑌵𑌰𑍍𑌣𑌃 𑌪𑍍𑌰𑌤𑌾𑌪𑌵𑌾𑌨𑍍 ।
𑌸𑌮𑌃 𑌸𑌮𑌵𑌿𑌭𑌕𑍍𑌤𑌾𑌙𑍍𑌗𑌃 𑌵𑌰𑍍𑌣𑌂 𑌶𑍍𑌯𑌾𑌮𑌂 𑌸𑌮𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑌃 ॥
𑌤𑍍𑌰𑌿𑌸𑍍𑌥𑌿𑌰𑌃 𑌤𑍍𑌰𑌿𑌪𑍍𑌰𑌲𑌮𑍍𑌬𑌶𑍍𑌚 𑌤𑍍𑌰𑌿𑌸𑌮𑌃 𑌤𑍍𑌰𑌿𑌷𑍁 𑌚𑍋𑌨𑍍𑌨𑌤𑌃 ।
𑌤𑍍𑌰𑌿𑌤𑌾𑌮𑍍𑌰𑌃 𑌤𑍍𑌰𑌿𑌷𑍁 𑌚 𑌸𑍍𑌨𑌿𑌗𑍍𑌧𑌃 𑌗𑌮𑍍𑌭𑍀𑌰𑌸𑍍𑌤𑍍𑌰𑌿𑌷𑍁 𑌨𑌿𑌤𑍍𑌯𑌶𑌃 ॥

விபுலாம்ஸோ மஹாபாஹு: கம்புக்ரீவ: சுபாநந: ।
கூடஜத்ரு: ஸுதாம்ராக்ஷ: ராமோ தேவி ஜனை: ச்ருத: ॥
துந்துபிஸ்வநநிர்கோஷ: ஸ்நிக்தவர்ண: ப்ரதாபவான் ।
ஸம: ஸமவிபக்தாங்க: வர்ணம் ச்யாமம் ஸமாச்ரித: ॥
த்ரிஸ்திர: த்ரிப்ரலம்பச்ச த்ரிஸம: த்ரிஷு சோந்நத: ।
த்ரிதாம்ர: த்ரிஷு ச ஸ்நிக்த: கம்பீரஸ்த்ரிஷு நித்யச: ॥

விசாலமான தோள் ப்ரதேசத்தோடும் கூடமாய் மறைபட்ட புஜங்களுடைய ஸந்திகளோடும் சங்கம்போல் வெளுப்பான கழுத்துப் பிரதேசத்தோடும் கூடினவர், நீண்ட கைகளையுடையவர். சிவந்த கண்களை உடையவர். கம்பீரமான ஸ்வபாவத்தோடும் கூடினவர். அழகான தேகத்தின் நிறத்தோடும் விளங்குபவர்; மகா பராக்ரமசாலியும்தான். வலது இடது

பாகங்களில் உள்ள அவயவங்கள் ஸமமாக இருக்கும்படி உள்ள ஸந்நிவேசத்தோடு கூடினவர். மார்பு மணிக்கட்டு முஷ்டி இந்த மூன்றிலும் ஸ்திரத் தன்மையோடு கூடினவர்.

उरश्च मणिबन्धश्च मुष्टिश्च नृपतेः स्थिराः ।

𑌉𑌰𑌶𑍍𑌚 𑌮𑌣𑌿𑌬𑌨𑍍𑌧𑌶𑍍𑌚 𑌮𑍁𑌷𑍍𑌟𑌿𑌶𑍍𑌚 𑌨𑍃𑌪𑌤𑍇𑌃 𑌸𑍍𑌥𑌿𑌰𑌾𑌃

உரச்ச மணிபந்தச்ச முஷ்டிச்ச ந்ருபதே: ஸ்திரா:

என்று ஸாமுத்ரிகா லக்ஷண சாஸ்திரத்தில் சொல்லியபடி மேற்சொன்ன மூன்று பாகங்களிலும் ஸ்திரத்தன்மையோடு கூடினவர். அவ்விதமே மூன்று ப்ரதேசங்களிலும் தீர்க்கமாக நீண்டு இருக்கும் பாகத்தோடும் கூடினவர்.

दीर्घभ्रूबाहुमुष्कस्तु चिरजीवी धनी नरः ।

𑌦𑍀𑌰𑍍𑌘𑌭𑍍𑌰𑍂𑌬𑌾𑌹𑍁𑌮𑍁𑌷𑍍𑌕𑌸𑍍𑌤𑍁 𑌚𑌿𑌰𑌜𑍀𑌵𑍀 𑌧𑌨𑍀 𑌨𑌰𑌃 ।

தீர்கப்ரூபாஹுமுஷ்கஸ்து சிரஜீவீ தனீ நர: ।

என்ற சாஸ்த்ரப்படி புருவங்கள் கைகள் முஷ்கம் இந்த மூன்றும் எந்த மனிதனுக்கு தீர்க்கமாக இருந்து வருகின்றதோ அந்த மனிதன் சிரஞ்ஜீவியாகவும் மகா தனிகனாகவும் இருந்து வருவான் என்ற சாஸ்த்ரப்ரகாரம் தீர்க்கமான புருவம், பாஹு, முஷ்கம் இவைகளோடு கூடினவர்.

त्रयश्च यस्य विद्यन्ते प्रलम्बाः मेढ्रबाहवः ।

𑌤𑍍𑌰𑌯𑌶𑍍𑌚 𑌯𑌸𑍍𑌯 𑌵𑌿𑌦𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 𑌪𑍍𑌰𑌲𑌮𑍍𑌬𑌾𑌃 𑌮𑍇𑌢𑍍𑌰𑌬𑌾𑌹𑌵𑌃

த்ரயச்ச யஸ்ய வித்யந்தே ப்ரலம்பா: மேட்ரபாஹவ: ।

என்ற வசனத்தையனுஸரித்தும் மூன்று ஸ்தானங்களில் ஸாம்யத்தையும் அடைந்தவன்.

केशाग्रं वृषणं जानु समा यस्य स भूपतिः ।

கெஶாக்ரு வ்ருஷணம் ஜாநு ஸமா யஸ்ய ஸ பூவதிঃ ।

கேசாக்ரம் வ்ருஷணம் ஜாநு ஸமா யஸ்ய ஸ பூபதி: ।

என்ற சாஸ்த்ரத்தை யனுஸரித்து தலைமயிரின் நுனிபாகங்கள், இரண்டு வ்ருஷணங்கள், முழங்கால் இவைகள் ஸமமாக மேற்கிழ் என்ற தாரதம்யத்தை இழந்து உத்தம புருஷர்களிடம் காணப்படும். அவ்விதம் பகவானுன ஸ்ரீராமனிடம் இருந்து வருகிறது. அதை திரிஸம: என்ற பதத்தினுல் ஸூசிப்பிக்கின்ருர். தவிர त्रिषु च उन्नतः (த்ரிஷு ச உந்நதঃ) (திரிஷு ச உந்நத:) என்ற பதத்தினுல்

उन्नतकुक्षिः क्षितिपाः परिमण्डलोन्नतनाभय क्षितिपाः ।
हृदयं न वेपनं पृथु समोन्नतं मांसलं च नृपतीनाम् ॥

உந்நதகுக்ஷிঃ க்ஷிதிபாঃ பரிமண்டலோந்நத
நாபயঃ க்ஷிதிபாঃ ।
ஹ்ருதயம் ந வெபநம் ப்ருது
ஸமொந்நதம் மாம்ஸலம் ச ந்ருபதீநாம் ॥

உந்நதகுக்ஷி: க்ஷிதிபா: பரிமண்டலோந்நதளுபய; க்ஷிதிபா: ।
ஹ்ருதயம் ந வேபநம் ப்ருது ஸமோந்நதம் மாம்ஸலம் ச ந்ருபதீனும் ॥

என்று வராஹ மிஹிரர் சொல்லியபடி உதர பாகத்திலும் நாபிப்ரேதசத்திலும் அப்படியே ஹ்ருதய பாகத்தில் பெரிதாயும், உன்னதமாயும், ஸமமாயும், மாம்ஸப்பற்று உள்ளதாயும் ஸந்நிவேச விசேஷங்கள் ராஜாக்களிடம் காணப்படுமென்று தெரிகின்றபடியினுல் அந்த விசேஷங்களெல்லாம் ஸ்ரீராமனிடம் ப்ரத்யக்ஷமாகக் காணப்படுகிறபடியினுல் त्रिषु च उन्नतः (த்ரிஷு ச உந்நதঃ) (திரிஷு ச உந்நத:) என்ற பதத்தினுல் அதை ஆஞ்ஜனேய ஸ்வாமியானவர் தெரிவிக்கின்ருர். அவ்விதமே त्रिताम्रः (த்ரிதாம்ரঃ) (திரிதாம்ர:) மூன்று ப்ரதேசங்களில் சிகப்பு நிறமுடையவராயும் இருந்து வருகின்ருர்.

श्लिष्टाङ्गुली रुचिरताम्रनखौ सुपार्ष्णी पादौ करावपि सुरक्तनखात्मरेखौ । ([illegible]) (ச்லிஷ்டாங்குலீ ருசிரதாம்ரநகௌ ஸுபார்ஷ்ணீ பாதௌ கராவபி ஸுரக்தநகாத்மரேகௌ) என்ற ஸாமுத்ரிகா சாஸ்த்ரத்தையனுஸரித்து சிகப்பான நகங்கள்; சிவந்த பார்ச்வங்கள், கைகள் அவ்விதமே கால்கள் இவைகளோடு கூடினவர்.

स्निग्धाः भवन्ति वै तेषां पादरेखाः शिरोरुहाः ।

[illegible]

ஸ்நிக்தா: பவந்தி வை தேஷாம் பாதரேகா: சிரோருஹா ।

என்ற வசனப்படி கால்களென்ன ரேகைகளென்ன தலைமயிர்களென்ன இவைகள் மூன்றும் ஸ்னிக்தமாக, பிசு பிசுப்புள்ளதாக இருந்து வருகின்றது. தவிரவும்

स्वरे गतौ च नाभौ च गम्भीरः त्रिषु सस्यते ।

[illegible]

ஸ்வரே கதௌ ச நாபௌ ச கம்பீர: த்ரிஷு ஸஸ்யதே ।

என்ற வசனப்ரகாரம், கண்டஸ்வரத்திலும், காம்பீர்யத்தோடு கூடினவர். ஸாமுத்ரிகா லக்ஷண சாஸ்திரத்தில் உத்தம புருஷனுடைய அவயவ ஸந்நிவேச விசேஷங்கள் எவ்விதமாக வர்ணிக்கப்பட்டிருக்கின்றதோ அவைகள் எல்லாவற்றிற்கும் ராமனைத்தான் உதாஹரணமாகச் சொல்லவேண்டும்

सत्यधर्मपरः श्रीमान् संग्रहानुग्रहे रतः ।
देशकालविभागज्ञः सर्वलोकप्रियंवदः ॥

[illegible]
[illegible]

ஸத்யதர்மபர: ஸ்ரீமான் ஸம்க்ரஹானுக்ரஹே ரத: ।
தேசகாலவிபாகக்ஞ: ஸர்வலோகப்ரியம்வத: ॥

ஸத்தியத்தையும், தர்மத்தையும் கைகொண்டவர். அக்கார ணத்தினால், ஸகலவிதமான ஸம்பத்துக்களாலும் அலங்கரிக் கப்பட்டவர். ப்ரஜைகளிடமிருந்து கப்பம் வாங்குவதிலும் கொடுக்கவேண்டிய ஸந்தர்ப்பத்தில் கொடுப்பதிலும் சமர்த்தர். தேச காலத்தை யறிந்து ஸர்வப் பிராணி களுக்கும், ப்ரியமாகவே பேசிக்கொண்டு ப்ராணிகளுக்கு நன் மையைச் செய்வதிலேயே, மிகவும் ஈடுபட்டவர். அவ்விதமே, அந்த ராமனுடைய தம்பியான லக்ஷ்மண ஸ்வாமியும், ஸமஸ்தமான விக்ரஹ குணங்களாலும், ஆத்ம குணங்களா லும் அலங்கரிக்கப்பட்டவர். அந்த இருவர்களும், உன்னைப் பார்க்க வேண்டுமென்கிற உத்ஸாஹமுடையவர்களாய்க் கொண்டு, பூமி முழுவதும் தேடிக்கொண்டு யத்ருச்யையாக, ருச்யமூக பர்வதத்தினுடைய ஸமீபத்திற்கு வந்து சேர்ந்து எங்களைச் சந்தித்தார்கள். ருச்யமூக பர்வதத்திலோ வாலிக்குப் பயந்துகொண்டு வானர ராஜனான சுக்ரீவன் வஸித்து வருகின்றான். நானும் என்னைப்போன்ற சிலரும் ஸுக்ரீவனுடைய நீதியை அனுஸரித்து ஸுக்ரீவனுக்குப் பரிசர்யை செய்துகொண்டு ஸுக்ரீவன் பின்னாடியே நாங் களும் வாஸம் செய்கின்றோம். ராம லக்ஷ்மணர்களைப் பார்த்தவுடன் ஸுக்ரீவன் வாலிதான் ராஜபுத்ரர்களைப் போல் வேஷம் போட்டுக்கொண்டு தன்னை ஹிம்சிக்க வரு கின்றானோ என்று பயந்து ரிச்யமூக பர்வத்தைவிட்டு வெளி யில் ஓட ஆரம்பித்தான். நான்தான் ஸுக்ரீவனை ஸமாதானம் செய்து மதங்க மஹரிஷியினுடைய சாபத்தினால் வாலி இங்குவர ஸந்தர்ப்பமேயில்லை. யாரோ மஹா புருஷர்கள் வருகின்றார்கள். இந்த மஹான்களுடைய ஸங்கமத்தினால் நமக்கு ஏற்பட்ட துக்கமானது நிவ்ருத்தி அடையக்கூடிய காலமும் வரும்போல் தோன்றுகின்றது. ஆகையினால் இந்த மஹான்களுடைய ஸமீபம் நானே சென்று, அவர்களுடைய அபிப்ராயத்தை நன்றாய் பரீக்ஷித்து வருகின்றேன். நீ பயத்தை விட்டு விடலாம் என்று சொல்லிவிட்டு, ராம லக்ஷ்ம ணர்களுடைய ஸமீபத்திற்கு நான் சென்றேன். அஞ்சலி

பந்தத்துடன் ராம லக்ஷ்மணர்களுடைய மனோபாவத்தை நான் அறிந்துகொண்டு உன்னை அவர்கள் தேடி வருகின்றதாகவும், ராவணனை வதம் செய்து உன்னைத் திரும்பி அடைய ஸுக்ரீவனை ஸஹாயமாக எதிர்பார்த்து வருகின்றவர்களாகவும் தெரிந்துகொண்டேன். அதில் எனக்கு மிகவும் ஸந்தோஷம் ஏற்பட்டுவிட்டது. அதை நான் அறிந்துகொண்ட பிறகு ஸுக்ரீவனும் வாலியைக் கொன்று தான் கிஷ்கிந்தா ராஜ்யத்தை அடைகின்ற விஷயத்தில் தங்களைப்போன்ற மஹா புருஷர்களை ஸஹாயமாக எதிர்பார்க்கின்றான், ஆகையினால் பரஸ்பர அபேக்ஷை இருவர்க்கும் இருப்பதினால் தாங்கள் அவச்யம் ஸுக்ரீவனோடு ஸக்யம் செய்துகொண்டு பரஸ்பரம் உபகார்ய உபகாரக பாவத்தை அடைந்து பரம ஸந்தோஷத்துடன் விளங்கி வரலாமென்று சொல்லிவிட்டு ராமலக்ஷ்மணர்களை என்னுடைய முதுகில் தூக்கிக்கொண்டு நானே ஸுக்ரீவன் ஸமீபத்திற்கு வந்து சேர்ந்தேன். பரஸ்பரம் ராமனும் ஸுக்ரீவனும் தன் தன் கதைகளைச் சொல்லிக்கொண்டார்கள். நாங்கள் இந்த பர்வதத்தினுடைய சிகரத்தில் வெகு காலமாக வஸித்து வருகின்றவர்களானதினால் ராவணன் உன்னை அபஹரித்துக்கொண்டு போகும் ஸமயத்தில் நீ சில ஆபரணங்களை ஒரு வஸ்த்ரத்தில் முடிந்து இங்கு கீழே விழும்படி போட்டுவிட்டுப் போனது ஞாபகமிருக்கலாம். அதை நாங்கள் ஜாக்ரதை செய்து வைத்துக்கொண்டிருந்தோம். ராமனுக்கும் ஸுக்ரீவனுக்கும், அக்னி ஸாக்ஷிகமாக ஸ்னேஹமானவுடன், அந்த ஆபரணங்களை ராமனிடம் காண்பித்தோம். ராமனும் அவைகளைப் பார்த்து மிகவும் உன்னை நினைத்துக்கொண்டு துக்கப்பட்டார். பிறகு லக்ஷ்மண ஸ்வாமியோடு ஆலோசித்து உன்னுடைய ஆபரணங்கள் தான் என்று தீர்மானித்து உன் கவலையாகவே ராமன் இருந்து வந்தார், உன்னைக் காணாத காரணத்தினாலே, ராமன் படுகின்ற துக்கத்தை வர்ணித்து முடியாது. அதிசீக்கிரத்தில் ராவணனை பந்துவர்க்கங்களோடு சேர்த்துக் கொன்று விட்டு

ராமன் உன்னை அடைவார் என்பதில் எனக்கு ஸந்தேஹமே யில்லை. ராவணனைக் கொன்று உன்னை துக்கத்தின்றும் மீட்டு வைக்கின்ற விஷயத்தில் சுக்ரீவனும், வாலியைக் கொன்று, கிஷ்கிந்தா ராஜ்யத்தை சுக்ரீவனுக்கு அளிப்பதில் ராமனும் அக்னி ஸாக்ஷிகமாக ப்ரதிக்ஞை செய்து கொண்டு வாலியைக் கொல்வதற்கு ராமனுக்குச் சக்தி இருக்கின்றதா என்ற விஷயத்திலும் சுக்ரீவனால் வெகுவிதமாகப் பரீக்ஷிக்கப் பட்டு ராமன், வாலியைக் கொல்லும் விஷயத்தில் ஸாமர்த்தியமுள்ளவர்தான் என்ற நம்பிக்கையையும் ஸுக்ரீவன் அடையும்படியாக செய்தார். பிறகு ஸ்ரீராமனும் ஸுக்ரீவன் மூலமாக வாலியை யுத்தத்திற்கழைத்து வாலியை வதைத்து ஸுக்ரீவனை கிஷ்கிந்தா ராஜ்யத்திற் கதிபதியாகவும் செய்தார். பிறகு கொஞ்சகாலம் ஆனதும் வானர சேனைகளைத் திரட்டி ஆங்காங்கு நான்கு திசைகளிலும் உன்னைத் தேடுவதற்காக அனுப்பினார்கள். தக்ஷிண திசையில் உன்னைத் தேடுவதற்கு வந்திருக்கும் வானரர்கள் மஹா பராக்ரமசாலிகள். வாலியினுடைய பிள்ளையான அங்கதன், ஜாம்பவான், நலன், நீலன், சரபன், மைந்தன், த்விதன், முதலான மஹா பராக்ரமசாலிகளால் அலங்கரிக்கப்பட்ட கோடிக் கணக்கான வானரர்கள் உன்னைத் தேடிக் கொண்டு வருகின்றார்கள். அதில் நானொருவன். எனக்கு ஹநுமான் என்று பெயர். அனேக இடங்களில் தேடி உன்னுடைய இருப்பிடத்தைக் கண்டுபிடிக்க முடியாமலும், ராஜனுடைய ஆக்ஞை காலம் அதிக்ரமித்துவிட்டபடியினாலும், இனிமேல் நாம் திரும்பிச்சென்று ஸுக்ரீவனுடைய ஸமீபம் போவது உசிதமில்லையென்று தீர்மானித்து தெற்கு ஸமுத்ரக் கரையில் மஹேந்த்ர பர்வதத்தினருகில் ப்ராயோபவேசனம் செய்து ப்ராணத்யாகம் செய்வதாகத் தீர்மானித்து விட்டோம். அந்த ஸந்தர்ப்பத்தில் ஜடாயு ராமனுடைய கார்யத்தில் ப்ராணத்யாகம் செய்த விஷயத்தை நாங்கள் பேசிக் கொண்டிருக்கும்பொழுது, அந்த வார்த்தையானது, ஜடாயுவினுடைய ஸஹோதரனான ஸம்பாதியினுடைய காதில்

விழவே, அவருடைய ஸமாகமத்தினால் இந்த லங்கா நகரத்தில் அசோக வனத்தில் உன்னுடைய இருப்பிடத்தைத் தெரிந்துகொண்டோம் ஸமுத்ரத்தைத் தாண்டுவதில் எவ்விதமான உபாயமென்று யோசித்து ஜாம்பவானுடைய ப்ரேரணையினால் நான் அதில் பரம உத்ஸாஹத்தையடைந்து ஸமுத்ரத்தைத் தாண்டி இரவில் லங்கா நகரத்தில் ப்ரவேசம் செய்தேன். இலங்கையில் ஓரிடம் பாக்கியில்லாமல் உன்னை நான் தேடியும் கண்டுபிடிக்க முடியாமல் மிகவும் வருத்தத்துடன் கஷ்டப்பட்டேன். பிறகு, ஸம்பாதியினுடைய வார்த்தையை ஸ்மரித்துக் கொண்டு இந்த அசோகவனத்தில் வந்து உன்னை நான் கண்டேன். ராமகார்யத்தில் துரந்தரன், ராமதூதன் என்று நீ அறியவேண்டும்.

कुशली तव काकुत्स्थः सर्वशस्त्रभृतां वरः
गुरोराराधने युक्तः लक्ष्मणश्च सुलक्षणः ॥

𑌕𑍁𑌶𑌲𑍀 𑌤𑌵 𑌕𑌾𑌕𑍁𑌤𑍍𑌸𑍍𑌥𑌃 𑌸𑌰𑍍𑌵𑌶𑌸𑍍𑌤𑍍𑌰𑌭𑍃𑌤𑌾𑌂 𑌵𑌰𑌃 ।
𑌗𑍁𑌰𑍋𑌰𑌾𑌰𑌾𑌧𑌨𑍇 𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑌣𑌶𑍍𑌚 𑌸𑍁𑌲𑌕𑍍𑌷𑌣𑌃 ॥

குசலீ தவ காகுத்ஸ்த: ஸர்வசஸ்த்ரப்ருதாம் வர: ।
குரோராராதநே யுக்த: லக்ஷ்மணச்ச ஸுலக்ஷண: ॥

வில்லாளிகளுக்குள் முந்தினவனாயும், உன் பர்த்தாவாயுமுள்ள ஸ்ரீராமன் பரம ஸௌக்யத்தோடு விளங்கி வருகின்றார். லக்ஷ்மணஸ்வாமியும் ராமருக்கு வேண்டிய பரிசர்யை செய்துகொண்டு உன்னுடைய விரஹத்தினால் ராமனுக்கேற்பட்ட துக்கத்தை அடிக்கடி ஏற்படாமலிருக்கும்படி ஸமாதானம் சொல்லிக்கொண்டு ராமனுடைய அருகில் இருந்து வருகின்றார். நானொருவன் ஸுக்ரீவனுடைய வார்த்தையை சிரஸால் வஹித்துக்கொண்டு உன்னைத் தெற்கு திசை முழுவதும் தேடி ஸமுத்ரத்தைத் தாண்டி, இரவில் லங்கையில் நுழைந்து, அசோக வனத்தில் உன்னை நான் கஷ்டப்பட்டுப்

பார்த்தேன். என்னுடைய ஸமுத்ரதரண ப்ரயாஸமானது உன்னை நான் பார்த்ததினால் ஸபலமாக ஆகிவிட்டது. கோடிக் கணக்கான வானர ஸேனைகளுக்குள் நானொருவன்தான் ராவணனால் அபஹரிக்கப்பட்ட உன்னைக் கண்டுபிடித்தேன் என்ற யசஸ்ஸையும், பூர்வ புண்ய புஞ்சத்தினால் அடையப் போகின்றேன். மகா வீரனான பகவானும் அதி சீக்கிரத்தில் உன்னை அடைவார். உன்னுடைய நிமித்தமாக லங்கா நக ரமே சூன்யமாக ஆகிவிடப் போகின்றது. மால் யவான் என்ற மலை மலைகளுக்குள் உயர்ந்த மலையாக ஆகும். அதிலிருந்து கோகர்ணமென்ற பர்வதமானது தொடர்ந்து வருகிறது. அனேக தேவரிஷிகள் அங்கு தவம் செய்துகொண்டிருக்கும் வழக்கமுண்டு. அந்த மலையோ மேற்கு ஸமுத்ரத்தின் அருகில் இருந்து வருகின் றது. அந்தப் புண்யமான ஆச்ரமத்தை சம்பஸாதனன் என்ற ஓர் அசுரன் தேவர்களுக்கும் ரிஷிகளுக்கும் அந்தப் புண்ய தீர்த்தம் உபயோகம் ஆகாமலிருக்கும்படி உபத்ரவத் தைச் செய்து வந்தான். ருக்ஷரஜா: என்ற பெயருள்ள ஒரு வானரராஜன், தேவரிஷிகளுடைய ப்ரார்த்தனைக்கிணங்கி அந்த சம்பஸாதனன் என்ற அஸுரனைக் கொன்று அந்தப் புண்யமான ஆச்ரமத்தை தேவரிஷிகளுடைய தவத்திற்கு யோக்யமாகச் செய்தான். தீர்த்தத்தையும் உபத்திரவமில் லாததாகச் செய்தான். அதனால் ருக்ஷரஜா: என்ற வானரத் திற்குப் பரிபூர்ணமாக அனுக்ரஹத்தை யளித்தார்கள். அவ ரைத்தான் என்னுடைய தகப்பனார் என்று சொல்வார்கள். அந்த ருக்ஷரஜஸ் என்பவருடைய களத்ரமாகிய அஞ்சனா தேவியினிடம் நான் பிறந்தவனானகையினால் ஆஞ்ஜனேய னென்று என்னை ஜனங்கள் சொல்வார்கள்.

என்னுடைய கர்மாவினாலேயே நான் உலகத்தில் பிர ஸித்தி அடைந்தவன். உனக்கு என்னிடத்தில் த்ருடமான நம் பிக்கை வருவதற்காக நான் இவ்வளவுதூரம் சொல்லவேண் டியதாயிற்று. உன் பர்த்தாவான ராமனுடைய கல்யாண குணங்களையும் நான் எடுத்துரைத்தேன். லக்ஷ்மணனுடைய

குறுதிசயங்களையும் சொன்னேன் வானரங்களுக்கும் ராமனுக்கும் ஏற்பட்ட ஸங்கமத்தின் காரணத்தையும் சொன்னேன். என்னுடையபெருமையையும் கொஞ்சம் எடுத்துரைத்தேன். இதிலிருந்தாவது நீ என்னை ராமதூதன் என்று நம்புவாயென்று எண்ணுகிறேன். ஹே பரதேவதே, என்னை நீ வேறுவிதமாக நினைக்கக்கூடாது. மிகவும் சீக்கிரத்தில் ராமன் உன்னை இந்த இடத்தைவிட்டு தன்னிடத்தில் அழைத்துக்கொள்வார்'' என்று வெகுப்ரகாரமாக ஆஞ்ஜனேய ஸ்வாமியானவர் தன்னிடத்தில் நம்பிக்கை வரும்படி பேசினார்.

ஸீதைக்கு ஆஞ்ஜனேயர் சொன்ன வார்த்தையிலிருந்துமே, ராமதூதன்தான் என்று நம்பி, பரம ஸந்தோஷத்தை அடைந்ததோடுகூட, ராமனைவிட்டுப் பிரிந்த காரணத்தினால் அந்த ராமனுடைய வ்ருத்தாந்தத்தை, தான் கேட்டதிலிருந்தும் கண்ணீர் ஜலத்தைப்பெருக விட்டுக் கொண்டு கொஞ்ச நேரம் மிகவும் கஷ்டப்பட்டாள். தேவியினுடைய முகம் சற்று நேரத்திற்கப்பால் மலர்ந்து அழகாக சோபித்தது. ராகுவினால் விடப்பட்ட சந்த்ரனைப்போல் விளங்கியது. ஹனுமானையும் முன்போல் வித்யாஸமாக எண்ணவில்லை. இப்படித் தன்னுடைய விஷயத்தில் ஸந்தோஷமாக ஸீதை ஆனவுடன் ஆஞ்ஜனேய ஸ்வாமியும் "ஹே தேவி, நீ ஸமாதானத்தை அடையவேண்டும், கொஞ்சமேனும் மனதில் வருத்தம் கூடாது. உன்னுடைய தூதனென்றே என்னை நீ நினைத்து தைரியத்தை அடையவேண்டும், மஹரிஷிகளுடைய ப்ரார்த்தனைகளுக்கு இணங்கி, ருக்ஷரஜஸ் என்ற வானரச்ரேஷ்டன் சம்பஸாதனன் என்ற ஓர் அஸுரனைக் கொன்றான் என்ற கதையைச் சொன்னேனே அந்த மஹாபராக்ரமசாலியான ருக்ஷரஜாவினுடைய களத்ரமாகிய அஞ்ஜனாதேவியினிடம் வாயு தேவதையின் மூலமாக நான் உண்டானவன். வாயுவிற்கு ஸமானமான பராக்ரமத்தோடு கூடினவன். பிறந்தவுடனே ப்ரும்மா மூலமாக அனேகவிதமான வரபலத்தையும் நான் அடைந்தவன். என்னு

டைய சக்தியைப்பற்றி நான் உனக்கு அதிகம் சொல்ல வேண்டாம். இப்பொழுது ராவணனைக் கொன்று லங்கா நகரத்தை, பஸ்மமாக்கி விடவேண்டுமென்றால் செய்து விடுகிறேன். நீ தைரியத்தை அடையவேண்டியது மாத்திரம் என்னுடைய ப்ரார்த்தனையாகும்" என்று அஞ்சலி பந்தத்துடன் ஆஞ்ஜனேய ஸ்வாமியானவர் மிகுந்த வணக்கத்துடன் தெரிவித்துக்கொண்டார்.

முன் சொன்னபடி ஸ்ரீ ராமனுடைய ஸந்தேச வார்த்தையினால் ஸீதாதேவிக்கு தன்னிடத்தில் நம்பிக்கையுண்டாகும்படி செய்துகொண்டு அதை த்ருடப்படுத்திக்கொள்ள ஆஞ்ஜனேய ஸ்வாமியானவர் தாரக ப்ரும்மமாகிய ராமனுடைய திருநாமத்தினால் அலங்கரிக்கப்பட்ட அங்குலீயகத்தை அதாவது முத்திரை மோதிரத்தை பிராட்டியினுடைய கையில் அர்ப்பணம் செய்கின்றார்.

भूय एव महातेजा हनुमान्मारुतात्मजः ।
अब्रवीत् प्रश्रितं वाक्यं सीताप्रत्ययकारणात् ॥
वानरोऽहं महाभागे दूतो रामस्य धीमतः ।
रामनामाङ्कितं चेदं पश्य देव्यङ्गुलीयकम् ॥
प्रत्ययार्थं तवानीतं तेन दत्तं महात्मना ।
समाश्वसिहि भद्रं ते क्षीणदुःखफला ह्यसि ॥

ஹூய ஏவ மஹாதேஜா: ஹநுமாந்மாருதாத்மஜ: ।
அப்ரவீத் ப்ரஶ்ரிதம் வாக்யம் ஸீதாப்ரத்யயகாரணாத் ॥
வாநரோஹம் மஹாபாகே தூதோ ராமஸ்ய தீமத: ।
ராமநாமாங்கிதஞ்சேதம் பஶ்ய தேவ்யங்குலீயகம் ॥
ப்ரத்யயார்த்தம் தவாநீதம் தேந தத்தம் மஹாத்மநா ।
ஸமாஶ்வஸிஹி பத்ரம் தே க்ஷீணது:கபலா ஹ்யஸி ॥

பூய ஏவ மஹாதேஜா: ஹநுமாந்மாருதாத்மஜ:
அப்ரவீத் ப்ரச்ரிதம் வாக்யம் ஸீதாப்ரத்யயகாரணாத் ॥
வாநரோஹம் மஹாபாகே தூதோ ராமஸ்ய தீமத: ।
ராமநாமாங்கிதஞ்சேதம் பச்ய தேவ்யங்குலீயகம் ॥
ப்ரத்யயார்தம் தவாநீதம் தேந தத்தம் மஹாத்மநா ।
ஸமாச்வஸிஹி பத்ரம் தே க்ஷீணது:கபலா ஹ்யஸி ॥

என்ற வாக்யங்களினால் ஆஞ்ஜனேய ஸ்வாமியானவர் சொல்வதாவது:

'ஹே பரதேவதே, நான் ஜாதியில் வானரன்தான், ஸகல ஜனங்களும் ஸுலபமாகக் கண்டு பிடிக்கக் கூடிய பகவானான ஸ்ரீராமனுக்கு தூதனாக ஆகும்படியான பாக்யத்தைச் செய்தவன். அக்காரணத்தினால் ராமதூதனான நான், ராமனுடைய திருநாமத்தால் அலங்கரிக்கப்பட்ட மோதிரத்தை உன்னுடைய நம்பிக்கைக்காக கொண்டுவந்திருக்கிறேன். பகவானான ஸ்ரீராமனால் நான் ராமதூதன் தான் என்று நீ உண்மையான நம்பிக்கை அடையவேண்டுமென்று அந்த மோதிரம் கொடுக்கப்பட்டது. அதிசீக்கிரத்திலேயே ஸ்ரீராமராலேயே உனக்கு மாங்கல்ய வ்ருத்தி ஏற்படுவதுடன் அவரைவிட்டு பிரியாமலிருக்கும்படியும் உனக்கு ஏற்படப் போகிறது." இவ்வாறு சொல்லி அந்த முத்திரைமோதிரத்தை அர்ப்பணம் செய்வதற்கு முன்பாகவே ஆஞ்ஜனேய ஸ்வாமியினுடைய கையிலிருந்து அந்த மோதிரத்தை பிராட்டியானவள் ஸ்வயமாகவே க்ரஹித்துக்கொண்டாள்.

गृहीत्वा प्रेक्षमाणा सा भर्तुः करविभूषणम् ।
भर्तारमिव संप्राप्ता जानकी मुदिताऽभवत् ॥

𑌗𑍃𑌹𑍀𑌤𑍍𑌵𑌾 𑌪𑍍𑌰𑍇𑌕𑍍𑌷𑌮𑌾𑌣𑌾 𑌸𑌾 𑌭𑌰𑍍𑌤𑍁𑌃 𑌕𑌰𑌵𑌿𑌭𑍂𑌷𑌣𑌮𑍍 ।
𑌭𑌰𑍍𑌤𑌾𑌰𑌮𑌿𑌵 𑌸𑌂𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌾 𑌜𑌾𑌨𑌕𑍀 𑌮𑍁𑌦𑌿𑌤𑌾𑌽𑌭𑌵𑌤𑍍 ॥

க்ருஹீத்வா ப்ரேக்ஷமாணா ஸா பர்து: கரவிபூஷணம் ।
பர்தாரமிவ ஸம்ப்ராப்தா ஜானகீ முதிதாபவத் ॥

தேசாந்தரத்திலிருந்தும் அபூர்வமாக வந்த பந்துவை, பார்த்த மாத்திரத்தில் ஸ்வயமாகவே, பரம ப்ரீதியுடன் ஆதரித்து அழைப்பதுபோல் ஸீதா ப்ராட்டியும், ராம நாமாங்கிதமான அங்குலீயகத்தை ஸ்வயமாகவே க்ரஹித்துக்கொண்டாள். தன் கையில் வைத்துக்கொண்டு அந்த மோதிரத்தை வெகு காலம் வரையிலும், அந்த மோதிரத்திலேயேதான் த்ருஷ்டியைச் செலுத்தி கவனித்து வந்தாள். தன்னை ஸ்ரீராமன் பாணிக்ரஹணம் செய்துகொள்ளும் காலத்தில் பகவானுன ஸ்ரீராமனுடைய கைகளால் தொடப்பட்ட, ஸ்பர்சம் ஏற்பட்ட மோதிரம் அது ஆகையினுல் மிகவும் தன்னுடைய ப்ரீதிக்கு ஆஸ்பதமான மோதிரமாக ஆகும். ப்ரணய கலஹத்தில், ஸ்த்ரீபுமான் இருவருக்கும் பரஸ்பரம் கோபம் ஏற்படுவதுபோல், ஸீதைக்கும் ராமனுக்கும் ஒரு ஸந்தர்ப்பத்தில் ப்ரணயதாரா நிமித்தமாக கோபமேற்பட்டு ராமனும் ஸீதையோடு பேசாமல் மௌனமாக இருந்துவிட்டார். ஸீதையும் அவ்விதமேராமனோடு பேசாமல் மௌனமாக இருந்தாள். இருவர்களுக்கும் மானுதிசயத்தினுல் ராமன்தான் முதன் முதலில் பேசட்டுமே என்று ஸீதை இருந்துவிட்டாள். ஸீதைதான் முதலில் பேசவேண்டும் என்று ராமனும் இருந்துவிட்டார். இவ்விதமிருக்க ப்ரணய தாரையினுடைய சௌக்யத்தையனுபவிக்காமலே, காலம் அதிக்ரமித்துக்கொண்டு வந்தது ராமனே, ஸீதையைத் தானுகப் பேசும்படி செய்ய என்ன வழியென்று யோசித்துத் தன் கையிலுள்ள அங்குலீயகத்தை ஸ்வயமாக நழுவச் செய்து, பூமியில் விழும்படி செய்துவிட்டார். உடனே ஸீதையும் அங்குலீயகமானது தன் விவாஹ காலத்தில் தன் பிதாவான ஜனகமகாராஜனுல், வரனுக்கு அலங்காரமாகக் கொடுக்கப்பட்டதினுலும், ஸ்த்ரீ ஜாதிக்கு, தன் பிறந்த வீட்டு சொத்தில் அபிமானம் அதிகமாக இருக்கும் ஸ்வபாவத்தினுலும், தான் முதலில் பேசுவதில்லை என்ற மானுதிசயத்தையும் விட்டு விட்டு "ப்ரபோ! மோதிரம் கீழே விழுந்துவிட்டது. வைரங்கள் தெறித்துப் போய்விட்டனவோ என்னமோ" என்று ஸம்ப்ர

மத்துடன் சொல்லிக்கொண்டு ராமனுடைய ஸமீபத்திற்குத் தானாகவே வந்துவிட்டாள். ராமனும் உடனே ஸீதையை ஆலிங்கனாதிகள் செய்துகொண்டு ப்ரணய தாரையினுடைய பராகாஷ்டையை அனுபவித்தார். இந்த எண்ணத்துடன் ஸீதையானவள் ஆஞ்ஜனேய ஸ்வாமியினுடைய கையிலிருந்தும் ஸ்வயமாகவே மோதிரத்தை க்ரஹித்துக் கொண்டு அதை கவனித்துப் பார்த்துக்கொண்டே "ஹே அங்குலீயகமே, அயோத்யா நகரத்தில், அந்தப்புரத்தில் ராமனுக்கும் எனக்கும் ஏற்பட்ட ப்ரணய கலஹத்தில் ஒருவர்க் கொருவர் பேசாமலிருந்து வந்தபொழுது மறுபடியும் எங்கள் இருவருக்கும் ஸம்பந்தத்தை செய்து வைத்த வஸ்துவல்லவா நீ. இப்பொழுதுமாத்திரம் நாங்கள் இருவரும் பிரிந்திருக்கும் காலத்தில் எங்கள் இருவரையும் சேர்த்து வைக்காமலிருப்பதன் காரணமென்ன? எதற்காக என்னிடத்தில் உனக்கு இவ்விதம் உபேக்ஷை ஏற்பட்டுவிட்டது? நான் ஏதாவது அபராதம் செய்துவிட்டேனா? அதை நீ மன்னித்துக்கொள்ளவேண்டும்" என்று சொல்வதுபோல் அந்த மோதிரத்தைக் கவனித்துப் பார்த்தாளாம்.

அந்த மோதிரத்தை அடைந்தவுடன் தன் பர்த்தாவை அடைந்திருப்பதுபோலுள்ள ஸந்தோஷமும் ஏற்பட்டது, அந்த மோதிரத்தினுடைய தர்சனத்தினால் தன்னுடைய கணவனை ராமருடைய கை நினைவு ஸீதைக்கு ஏற்பட்டுவிட்டது. கையினுடைய நினைவினால் பாஹுவினுடைய ஸ்மரணமும் ஏற்பட்டது அந்த ஸ்மரணம் மூலமாக ராமருடைய முழு உடலையும் பாவனையின் ப்ரகர்ஷத்தினால் எதிரில் நிற்பதுபோல் நினைத்து ராமனுடைய அப்ராக்ருத மங்கள விக்ரஹத்தை ஆலிங்கனம் செய்துகொண்டாள். ஆலிங்கனாதிகளால் பரமானந்த பரிதையாகவும் ஜானகி விளங்கினாள். சோகத்தினால் க்லேசத்தை அனுபவிப்பதற்கு அனர்ஹமான குலத்தில் பிறந்தவள் என்ற காரணத்தினால், இப்பொழுது தான் ஜானகி என்ற பெயரை அன்வர்த்தமாக அடைந்தாள்.

அங்குலீயக தர்சனமாத்திரத்தினுல் பகவத் விக்ரஹ ஆலிங்கனப்ரயுக்தமான ஆனந்தத்தையும், அனுபவித்து வந்தவள் போல் விளங்கினுள் என்று வால்மீகி மஹரிஷி, இந்த ச்லோகத்தினுல் ஸீதாதேவியினுடைய ஸந்தோஷாதிசயத்தை வர்ணிக்கின்றுர் ஒரு ஸ்த்ரீயானவள் தன் கணவனைக் கட்டிக்கொண்டு அனுபவிக்குமானந்தத்தை மற்றெருரு புருஷன் பார்க்கமுடியாததினுல் வால்மீகி மஹரிஷி எவ்விதம் இதை வர்ணிக்கின்றுர் என்று நினைக்கக் கூடாது ஜானகியை வால்மீகி மஹரிஷி, தன் தாய் என்ற புத்தியோடு பார்ப்பவரானதினுலும், ஸ்ரீராமனைத் தகப்பனுர் என்ற புத்தியோடு பார்க்கின்றவரானதினுலும் தாய் தந்தையர் அனுபவிக்குமானந்தத்தை தாயினுடைய ஸமீபத்திலிருந்துவரும் சிசுவானது அறிந்துதானே ஆகவேண்டும். ஆனுல் சிசுவினுடைய பருவத்தில் எப்படி அறிய முடியுமென்றும் நினைக்க வேண்டாம். ஸீதா தேவியினுடைய அருளும், ராமசந்த்ரனுடைய பரிபூர்ணமான அனுக்ரஹமும் இருக்கும் பக்ஷத்தில், யாருக்கு எந்த பருவத்தில்தான், எதைத்தான் அறிய சக்தி ஏற்படாது? ஆகையினுல் ஸீதா ராமானுக்ரஹத்தினுலும் ப்ருஹ்மாவினுடைய வரப்ரஸாதத்தினுலும், க்ரந்த கர்த்தாவான வால்மீகி மஹர்ஷிக்கு எதையும் அறிய சக்தி உண்டு.

தவிர, மேற்சொன்ன ச்லோகத்தின் வ்யங்க்யார்த்தமோ பின்வருமாறு: ஆஞ்ஜனேயஸ்வாமியினுல் ஸீதாபிராட்டியினிடம், மோதிரம் மாத்திரம் கொடுக்கப்படவில்லை, ஆஞ்ஜனேய ஸ்வாமியை ஆசார்ய புருஷனுக வர்ணித்தோம். पक्षी च शाखानिलयः प्रहृष्टः (பக்ஷீ ச சாகா நிலய ப்ரஹ்ருஷ்ட:)(பக்ஷீ ச சாகா நிலய ப்ரஹ்ருஷ்ட:) என்ற ச்லோக வ்யாக்யான அவஸரத்தில் அதை ஸ்பஷ்டமாக அறியலாம். ஸீதாதேவியையோ, ஸம்ஸார ஸாகரத்தினுடைய மத்தியில் பாஞ்ச பௌதிகமான பரிச்சின்னமான சரீரம் என்ற லங்காநகரத்தில் அவிவேகம் என்ற ராவணனுடைய பாரதந்திரியத்தில் அகப்பட்டுக்

கொண்டு, ஸம்ஸாரியாக துக்கத்தையனுபவித்து வரும் ஒரு உத்தம ஜீவனென்றும் கருதவேண்டும். இந்த ஜீவனே, எப்பொழுதும், தாரக ப்ரும்மமாகிற ராமனோடு சேர்ந்து கொண்டிருந்தே நித்யானந்தானுபவ யோக்யமான உத்க்ருஷ்ட புருஷனாக ஆவான். மாரீசனுடைய மான் வேஷத்தைப் பார்த்து விஷயாதிகளில் ப்ராவண்யம் ஏற்பட்ட காரணத்தில் இவ்விதமான கஷ்டத்தை அனுபவிக்கும்படியான நிலையை அடைந்துவிட்டான். இந்த ஜீவனுடைய உத்தாரணத்திற்காகவே ஆஞ்ஜனேய ஸ்வாமியினுடைய ப்ரவ்ருத்தி என்று முன்பு சொன்னோம். ஆஞ்ஜனேய ஸ்வாமியினுடைய ப்ரவ்ருத்தியை ஆசார்ய ப்ரவ்ருத்தியாகக் கருத வேண்டும். அந்த மஹானுபாவன் மூலமாக பிராட்டியினிடம் கொடுக்கப்பட்ட மோதிரமோ கேவலம் அங்குலீயகமாத்திரமல்ல. அஷ்டாக்ஷராதி மந்த்ரராஜரூபம் என்று முன்பு வர்ணித்தோம் அந்த ரீதியை அனுஸரித்து மேற்சொன்ன ச்லோகத்தின் அபிப்ராயத்தையறியவும்.

அதாவது, भर्तुः करविभूषणम् (ஃஅகூ: கரவிஃஷணம்)(பர்து: கரவிபூஷணம்) என்ற வாக்யத்தில், भर्ता (ஃஅகூா)(பர்த்தா) என்ற பதத்தினால் ஸீதையினுடைய பர்த்தா என்று மாத்திரம் ஸங்கோசம் செய்யாமல், ஸர்வ லோகத்தையும் தரிக்கின்ற ஸர்வலோக சரண்யனான விராட் ரூபியான பகவான் என்ற அர்த்தத்தைத் தெரிந்துகொள்ள வேண்டும். அந்த மஹானுபாவனுடைய, கரங்களைப்போன்ற கரங்கள் அதாவது புஜங்கள், பாஹுக்கள், बाहू राजन्यः कृतः (பாஹூ ராஜந்ய: க்ருத:) (பாஹூ ராஜந்ய: க்ருத:) என்ற புருஷ ஸூக்த வாக்யத்தை அனுஸரித்து, விராட் புருஷனான பகவானுடைய கைகளான க்ஷத்ரியர் என்ற அர்த்தத்தை भर्तुः कर (ஃஅகூ: கர)(பர்து: கர) என்பதினால் தெரிந்துகொள்ளவேண்டும். அந்த க்ஷத்ரியர்களுக்கு அலங்காரமாக, ஸர்வசத்ருஜயத்திற்கும் ஹேதுவாக அதாவது ஏகசக்ராதிபத்தியத்தைத் தான் வகிக்கும்படி தனக்கு நன்மையைச் செய்யக்கூடியதாக விளங்கிவரும் மஹா

மந்த்ரத்தையே विभूषणं (𑌵𑌿𑌭𑍂𑌷𑌣𑌂)(விபூஷணம்)என்ற பதத்திஞல் அறியவேண்டும்.

सावित्री तु द्विजानां हि विभूषणमितीरितम् ।
पञ्चाक्षरी ब्राह्मणानां क्षत्रियाणां तथैव च ॥
अष्टाक्षरो विशाञ्चैव भगवन्नामकीर्तनम् ।

𑌸𑌾𑌵𑌿𑌤𑍍𑌰𑍀 𑌤𑍁 𑌦𑍍𑌵𑌿𑌜𑌾𑌨𑌾𑌂 𑌹𑌿 𑌵𑌿𑌭𑍂𑌷𑌣𑌮𑌿𑌤𑍀𑌰𑌿𑌤𑌮𑍍 ।
𑌪𑌞𑍍𑌚𑌾𑌕𑍍𑌷𑌰𑍀 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌾𑌨𑌾𑌂 𑌕𑍍𑌷𑌤𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌾𑌂 𑌤𑌥𑍈𑌵 𑌚 ॥
𑌅𑌷𑍍𑌟𑌾𑌕𑍍𑌷𑌰𑍀 𑌵𑌿𑌶𑌾𑌞𑍍𑌚𑍈𑌵 𑌭𑌗𑌵𑌨𑍍𑌨𑌾𑌮𑌕𑍀𑌰𑍍𑌤𑌨𑌮𑍍 ।

ஸாவித்ரீ து த்விஜாநாம் ஹி விபூஷணமிதீரிதம் ।
பஞ்சாக்ஷரீ ப்ராஹ்மணாநாம் க்ஷத்ரியாணும் ததைவ ச ॥
அஷ்டாக்ஷரீ விசாஞ்சைவ பகவந்நாம கீர்தனம் ।

என்ற மனுவசனத்தை அனுசரித்து ப்ராம்மணன், க்ஷத்ரியன் வைச்யன் என்ற எல்லா த்விஜர்களுக்குப் பொதுவாக காயத்ரீ மஹா மந்த்ரத்தை அலங்காரமென்றும் சொல்லிவிட்டு அதில் ப்ராம்மணனுக்கு விசேஷமாக பஞ்சாக்ஷரீ மஹாமந்த்ரத்தையும், க்ஷத்ரியனுக்கு அஷ்டாக்ஷரீ மஹா மந்த்ரத்தையும் வைச்யனுக்கு பகவந்நாம ஸங்கீர்த்தனத்தையும், விசேஷமான விபூஷணமாகச் சொல்லப்பட்டிருக்கின்றது. அதை அனுஸரித்து भर्तुः करविभूषणं (𑌭𑌰𑍍𑌤𑍁𑌃 𑌕𑌰𑌵𑌿𑌭𑍂𑌷𑌣𑌂) (பர்து: கரவிபூஷணம்) என்ற வாக்யத்தில் ஸர்வஜகத் பர்த்தாவான ஸ்ரீமந் நாரயாணனுக்கு கைகளுடைய ஸ்தானத்திலேற்பட்ட க்ஷத்திரியர்களுக்கு யுத்தத்தில் ஜயத்தைக் கொடுக்கும் காரணத்திஞல் விபூஷண்மாக விளங்கிவரும், அஷ்டாக்ஷரீ முதலான மந்த்ர ராஜமென்றே இந்த வாக்யத்தின் தாத்பர்யத்தை அறிந்துகொள்ள வேண்டும். அதை ஆஞ்ஜனேய ஸ்வாமியென்ற ஆசார்ய புருஷன் மூலமாக ப்ரக்ருதத்தில் ஸீதை என்ற ஜீவன் உபதேசம் பெற்று அந்த மந்திரத்தின் அர்த்தத்தையும், அனுஸந்தானம் செய்து அதிலேயே ஈடுபட்டவளாக ஆனவுடனே, மந்த்ர

ஜபத்தினுல் அந்த மந்த்ரப்ரதிபாத்தியமான இஷ்டதேவதைகளோடு ஸல்லாபம் செய்யலாம் என்று அர்த்தமுள்ள ஸூத்ரத்தை அனுஸரித்து அஷ்டாக்ஷரீ மஹாமந்த்ர ப்ரதிபாத்யமான மஹாவிஷ்ணுவாகிய தன் பர்த்தாவான ராமனை நேரில் ஸாக்ஷாத்கரித்துக் கொள்வதுபோல், ஜனக குலத்தில் பிறந்த ஸீதையானவள், பரமானந்தத்தை யனுபவித்தாள் என்ற தாத்பர்யமும் மேற்கண்ட ச்லோகத்தில் தொனிக்கின்றது. இதுதான் இந்த உத்தம காவ்யம் என்ற ராமாயணத்திலுள்ள முத்திரை மோதிரம் கொடுக்கும் ச்லோகத்திற்கு வ்யங்க்யார்த்தமாகும்.

அந்தந்த மந்த்ர ஜபத்தினுல், அந்தந்த தேவதா ப்ரஸாதத்தை ப்ரத்யக்ஷமாக அடையலாமென்று சாஸ்த்ரங்கள் கூறுகின்றன் सुस्वागतां वाचमुदीरयान: (ஸுஸ்வாகதாம் வாசமுதீரயாந:)(ஸுஸ்வாகதாம் வாசமுதீரயாந:)என்ற வாக்யத்திலே, ஆஞ்ஜனேய ஸ்வாமியான ஆசார்ய புருஷன், தனக்கு ஆசார்ய பரம்பராப்ராப்தமான, அஷ்டாக்ஷரீ முதலான மந்த்ரராஜரூபமான வார்த்தையைச் சொல்லுகிருர் என்றும் சொல்லப்பட்டிருக்கின்றது. ततो रावणनीतायाः (ததோ ராவணநீதாயா:) ( ததோ ராவணநீதாயா: ) என்ற முதல் ச்லோகத்திலோ, ஸீதை ஜீவதத்வ மென்றும் ராவணனை அவிவேகமென்றும், தாரக ப்ரும்மமாகிற ராமனை விட்டுப் பிரியாததான ஜீவனுகிய ஸீதைக்கு விஷய ப்ராவண்யத்தினுல் பிரிவு ஏற்பட்டதென்றும் சொல்லப்பட்டிருக்கின்றது. ராமாயணமும் உத்தம காவ்யம் வ்யங்க்யார்த்தத்தை ப்ரதானமாக க்ரஹிக்கவேண்டும். இவைகளை முன்பின் ஆலோசித்துக் கவனித்துப் பார்த்தால் மேற்சொன்னபடி गृहीत्वा प्रेक्षमाणा सा (க்ருஹீத்வா ப்ரேக்ஷமாணா ஸா) (க்ருஹீத்வா ப்ரேக்ஷமாணு ஸா) என்ற ச்லோகத்திற்கு அர்த்தத்தை க்ரஹித்துக் கொள்வது அவச்யம்தான் என்பது ஸஹ்ருதயர்களுடைய புத்தியில் நிச்சயமாக உதிக்கக் கூடும், அப்பொழுது தான் இந்த காவ்யத்திற்கும் ஒரு அழகு ஏற்படும்.

தவிறவும், भर्तुः करविभूषणम्(ஹது: கரவிஹூஷணம்) (பர்து: கரவிபூஷணம்) என்பதினால், कं ब्रह्म खं ब्रह्म (கம் ப்ரஹ்ம வம் ப்ரஹ்ம) (கம் ப்ரஹ்ம கம்ப்ரஹ்ம) என்று சாந்தோக்யோபநிஷத்தில் ஸம்வர்க்க வித்யையில் கூறியபடி क (க)(க) சப்தத்தினால் ஆனந்தஸ்வரூபமான ப்ரப்ரும்மமென்ற அர்த்தத்தை அறியவேண்டும். रं (ரம்) (ரம்) என்பது அக்னி பீஜமாக ஆகும். அதனால் தீப்தியை க்ரஹித்துக் கொள்ளவேண்டும். क (க) (க) சப்தத்தினால் ஏற்படக்கூடிய விஷயானந்தத்தை வ்யாவ்ருத்தி செய்ய र (ர)(ர) என்றவிசேஷணத்தினால் ஸ்வயம் ஜ்யோதிஸ் என்ற விசேஷணத்தையும், रं (ரம்) (ரம்) என்றதினால் ஏற்பட்ட அக்னியாதி தீப்தியை வ்யாவ்ருத்தி செய்ய ஆனந்தத்தைக் குறிப்பிடும் क (க) (க) என்ற விசேஷணத்தையும் வைத்துக்கொண்டு करं (கரம்) (கரம்) என்ற பதத்தினால் ஜ்யோதிர்மயமான பரமானந்த ஸ்வரூபியான ப்ரம்மம் என்பதை அறிந்து கொள்ளவேண்டும். அந்த ஸ்வரூபம் தான் ப்ரக்ருதத்தில் ஸீதைக்கு ப்ர்த்தாவான ராமனுடைய நிஜஸ்வரூபமாக ஆகும்.

शेषे षष्ठी (ஶேஷே ஷஷ்டீ) (சேஷே ஷஷ்டீ) என்ற ந்யாயத்தை யனுஸரித்து भर्तुः (ஹது:) (பர்து:) என்ற ஷஷ்டியை ஸம்பந்த ஸாமான்ய ஷஷ்டியாக வைத்துக்கொண்டு भर्तुः करं (ஹது: கரம்) (பர்து: கரம்) என்பதினால் பர்த்ரு ஸம்பந்தியான நிஜ ஸ்வரூபத்தை என்ற தாத்பர்யத்தை க்ரஹித்துக் கொள்ளவேண்டும். அந்த ராமனுடைய நிஜஸ்வரூபத்தை विशेषेण भूषयतीति विभूषणम् (விஶேஷேண ஹூஷயதீதி விஹூஷணம்)(விசேஷேண பூஷயதீதி விபூஷணம்)என்ற ஸமாஸத்தினால், प्रत्यगात्मत्वेन(ப்ரத்யகாத்மத்வேந)(ப்ரத்யகாத்மத்வேந) போதித்து அலங்கரிக்கச் செய்கின்ற तत्त्वमसि (தத்த்வமஸி) (தத்த்வமஸி) இத்யாதி மஹா வாக்யங்களை भर्तुः करविभूषणं (வது: கரவிவூஷணம்) (பர்து: கரவிபூஷணம்) என்ற வாக்யத்தினால் அறிந்து கொள்ளலாம். ப்ரம்மத்தை உபதேசம் செய்கின்ற மஹா புருஷனே ஆசார்யன்

என்று சொல்லப்படுவான். आत्मेति तु उपगच्छन्ति ग्राहयन्ति च ([illegible]) (ஆத்மேதி து உபகச்சந்தி க்ராஹயந்தி ச) என்ற ஸூத்ரமே அதில் ப்ரமாணமாக ஆகும். ப்ரம்மத்தை ஆத்மாவிற்கு வேருக பார்த்தாலோ ப்ரம்மத்தினிடத்தில் நிருபாதிகமான பக்தி என்ற ப்ரேமையும் ஏற்பட நியாயம் இராது. அவனவனுக்கு அவனவனுடைய ஆத்மாவில்தான் நிருபாதிகமான ப்ரேமை ஏற்படும். तत्प्रेमात्मार्थमन्यत्र नैवमन्यार्थमात्मनि ([illegible]) (தத்ப்ரேமாத்மார்தமந்யத்ர நைவமன்யார்தமாத்மநி) என்ற வித்யாரண்யருடைய வாக்யமும், न वा अरे जायाया: कामाय जाया प्रिया भवति । आत्मनस्तु कामाय जाया प्रिया भवति । न वा अरेपत्यु: कामाय पतिः प्रियो भवति ।([illegible]) (ந வா அரே ஜாயாயா: காமாய ஜாயா ப்ரியோ பவதி। ஆத்மநஸ்து காமாய ஜாயா ப்ரியோ பவதி ந வா அரே பத்யு: காமாய பதி: ப்ரியோ பவதி) என்ற ச்ருதி வாக்யமும் அதில் ப்ரமாணமாக ஆகும். सा परानुरक्तिरीश्वरे ([illegible]) (ஸ பராநுரக்தி: ஈச்வரே) என்ற யோக ஸூத்ரமும், ஈச்வரனிடத்தில் ஏற்படும் நிருபாதிகமான ப்ரேமைதான் பக்தி சப்தார்த்தமாக ஆகும் என்று சொல்லுகிறது. இவைகளை யனுஸரித்து ப்ரும்மத்தை ஆத்மாவாக அனுஸந்தானம் செய்கின்ற அத்வைத பக்திதான் பரம பக்தியாக ஆகும். அப்படி ப்ரும்மத்தை ஆத்மாவென்று போதிக்கின்ற உபநிஷத் வாக்யங்கள் ப்ரும்மத்திற்கு அலங்கார பூதமாக ஆகின்றது. இவ்விதம், ராமனுடைய நிஜ ஸ்வரூபமாகின்ற ப்ரும்மத்தை ப்ரத்யகாத்மா என்று சொல்லி அலங்கரிக்கும் தத்த்வமஸி முதலான மஹா வாக்யமே என்று भर्तुः करविभूषणं ([illegible]) (பர்து: கரவிபூஷணம்) என்ற வாக்யத்தினுல் அறிந்துகொள்ள வேண்டும். அதை பரமாசார்யனுன ஆஞ்ஜனேய ஸ்வாமி மூலமாக உபதேசித்துக்கொண்டு அதனுடைய அர்த்தத்தை மனனமும் செய்து, நிதித்யாஸனமும் செய்து, ஸ்வரூப

ஸாக்ஷாத்காரத்தை யடைந்து நித்ய நிரதிசயமான ஆனந்த ஸாகரத்தில் ஸீதாதேவி யென்ற ஜீவன் விளங்கி வந்தாள் என்று இந்த ச்லோகத்திஞல் ஸ்பஷ்டமாக விளங்கி வருகின்றது. இதுவும் ப்ரபந்தத்தின் வ்யங்கய மர்யா தையை அனுஸரித்து ஏற்பட்ட அர்த்தமாகும்.

हनुमत् जानकी देव्याः संवादं श्रुतिसम्मतम् ।
श्रुत्वा मनुष्यो भूलोके सार्वभौमश्रियं लभेत् ॥

ஹனுமத் ஜானகீ தேவ்யா: ஸம்வாதம் ச்ருதி ஸம்மதம் ।
ச்ருத்வா மனுஷ்ய: பூலோகே ஸார்வபௌமச்ரியம் லபேத் ॥

इति श्रीमद् वाल्मीकी रामायणे सुन्दरकाण्डे पूर्वभाग: समाप्त: ।

இத்துடன்

ஸ்ரீமத் வால்மீகி ராமாயணத்தில்

ஸுந்தர காண்டம் பூர்வ பாகம்

முற்றிற்று.

